

ஈசன் அடிபோற்றி; எந்தை அடிபோற்றி;
தேசன் அடிபோற்றி; சிவன் சேவடிபோற்றி;
நேயத்தே நின்ற நிமலன் அடிபோற்றி;
மாயப் பிறப்பறுக்கும் மன்னன் அடிபோற்றி;
சீரார் பெருந்துறை நம்தேவன் அடிபோற்றி;
ஆராத இன்பம் அருளும்மலை போற்றி.

--சிவபுராணம்.

எல்லா உயிர்களுக்கும் தலைவனான ஈசுவரனுடைய திருவடிக்கு வணக்கம்; எம் அப்பனுடைய திருவடிக்கு வணக்கம்; ஞானப்பிரகாசமுடையவனது திருவடிக்கு வணக்கம்; செந்தாமரை போன்று சிவந்த சிவபெருமானது திருவடிக்கு வணக்கம்; மெய்யன்பர்களின் அன்பிலே நிலைபெற்ற மாசில்லாதவனுடைய (தூயவனது) திருவடிக்கு வணக்கம்; மாயையின் விளைவு ஆகிய வஞ்சனை பொய் முதலானவற்றுக்கு ஏதுவாகிய இம் மக்கள் பிறவியை வேருடன் அறுக்கும் மன்னனுடைய திருவடிக்கு வணக்கம்; சிறப்பு மிகுந்த திருப்பெருந்துறையில் எழுந்தருளியிருக்கும் நம் கடவுளின் திருவடிக்கு வணக்கம்; என்றும் தெவிட்டாத பேரின்பத்தை அளித்தருளும் மலையை உடையவனாம் சிவனின் திருவடிக்கு வணக்கம்.

# ஸப்தகிரி

பிப்ரவரி - 1996

தனிப்பிரதி ரூ. 2 இதழ் 9 மலர் 26

சிறப்பாசிரியர் :

திரு. என். ரமேஷ்குமார், ஐ.ஏ.எஸ்.
செயலாட்சித்தலைவர்,
தி.தி.தேவஸ்தானம்,
திருப்பதி.

ஆசிரியர்:

திரு. என்.எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

அச்சிடுபவர்:

திரு. பி. மோகன்ராவ்,
மேலாளர்,
தி.தி.தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

பிரதிகளுக்கு:

EDITOR,
"Sapthagiri"
T.T.D., Tirupati.

உள்ளுறை



அட்டைப்பட விளக்கம்

முகப்பட்டை : ஸ்ரீ அகஸ்தீஸ்வரசுவாமி - தொண்டவாடா (ஆ.பி.)

முதல் உள்ளட்டை : நந்தி வாஹனத்தில் ஸ்ரீகபிலேஸ்வரர் - திருப்பதி.

2-வது உள்ளட்டை : ஸ்ரீபார்வதி சமேத ஈஸ்வரன் - நாராயணவனம்.

பின்னட்டை : ஸ்ரீ ஆனந்தவல்லித்தாயார் - ஸ்ரீ அகஸ்தீஸ்வர சுவாமி கோயில் - தொண்டவாடா (ஆ.பி.)

JAGADISH

## உங்களுடன்......

உயிர்களின் இறுதி இலட்சியம் இறைவனை அடைவதேயாகும் என்பது இந்து சமயத்தின் ஆணித்தரமான அடிப்படைக்கொள்கையாகும். அதனை அடையவே உயிரானது ஆறறிவு வரை பலபிறவிகளில் பல உருவங்களைக் கொண்டு தோன்றி மறைகின்றது. இவற்றுள் அவ்வுயிரினை மேலும் புனிதப்படுத்திக்கொள்ளும் ஓர் அரிய வாய்ப்பாக - இறுதி வாய்ப்பாக ஆறறிவு கொண்ட மனிதப்பிறவி விளங்குகிறது. ஐந்தறிவு வரை உள்ள உயிர்கள் தங்கள் அறியாமையினால், உணர்ச்சிகளுக்கு ஆட்பட்டு தவறுகள் செய்யலாம். ஆனால் சிந்திக்கத் தெரிந்த மனிதன் - நல்லது, கெட்டது ஆய்வு செய்யக்கூடிய ஆற்றல் - உணர்வு பெற்ற மனிதன் தவறுவானாயின் குற்றம், பிழை அம்மனிதனுடையதே தவிர படைப்பினுடையது அல்ல. சிந்திக்கத் தெரிந்த மனிதன் தன் சிந்தனையை சீரியதாக்கிக்கொள்ள அம்மனிதனே முயலவேண்டும். அவன்தம் முயற்சிகள் தோய்வுறும்போது அவனுக்கு ஊக்கம் தந்திட, அவனுள் நம்பிக்கையினை ஏற்படுத்திட மற்றொன்றின் உதவி இன்றியமையாததாக உள்ளது. அந்த மற்றொன்றே 'சமய'மாகும். உலகத்து சமயங்கள் யாவும் நன்மை பயக்கவே தோன்றியுள்ளன. அச்சமயங்கள் போற்றும் கடவுளர்கள் மனிதனை உயர்த்தவே போதனைகள் புரிந்துள்ளனர். இவற்றினின்று 'இந்து' சமயம் சற்றே விலகித் தனித்து விளங்குகின்றது.

இந்த நாளில்தான், இன்னின்ன முறைகளில் தான், இந்த நேரத்தில்தான், இந்த இடத்தில்தான் கடவுளை வழிபடவேண்டும் என்றோ, கடவுளைத் தவிர எவரும் அவர் நிலையில் வைத்து வழிபடக்கூடாது என்றோ இந்து சமயத்தில் நியதிகள், கட்டுப்பாடுகள் இல்லை என்பதே அச்சமயத்தின் சிறப்பாகும். மனிதன் தன்னை முழுமையாக உணர்ந்து கொள்ள வேண்டும், தன் பிறவியின் பெருமையை அறிந்து கொள்ளவேண்டும் என்பதே இந்து சமயத்தின் பேரவா. அதனை நிறைவேற்றத்தான் இந்து சமயம் பல உட்பிரிவுகளைத் தன்னகத்தே கொண்டுள்ளது. இவ்வுட்பிரிவுகள் யாவும் ஒருருக்கு இட்டுச்செல்லும், முட்புதர்களோ, மேடுபள்ளங்களோ இல்லாத நன்கு செப்பனிடப்பட்ட, நல்வழிப்பாதைகள்தாம். ஒவ்வொருபாதையும் அதததற்குரியதான அழகுடன் திகழ்ந்து பரந்து விரிந்தும் உள்ளது. ஆம் இப்பாதையில் பயணித்திடும் ஒரு இந்துவானவன் எவ்விதக் குழப்பமின்றி, பிரச்சனையின்றி, தடங்கல் இன்றி அடைவதற்குரியதான அந்த 'இறைவனடி' எனும் இலக்கினை மனத்திட்பத்துடன் நம்பிக்கையுடன் எல்லாவற்றிற்கும் மேலாக தூய உள்ளத்துடன் அடைந்திடவே வழிவகுக்கின்றது. ஆற்றல்மிகு இப்பாதைகளாக வைணவம், சைவம் உள்ளிட்ட ஆறு சமயங்கள் திகழ்கின்றன. இவற்றுள் சைவச் சமயத்தலைவனாம் சிவனாரின் பெருமையினை

இச்சிவராத்திரி திருநாளன்று நினைவுகூர்வது, அவ் ஆடலரசனின் சிறப்பினை அறிந்துகொள்ளவேயாம்.

ஆதியந்தம் இல்லாது, எதிலும், எங்கும், என்றும் நிறைந்து முழுமுதலோனான திருமால் விளங்கிடினும், தன்னாற்றலை படைத்தல், காத்தல், அழித்தல் என்று பிரித்து, அதில் அழிக்கும் ஆற்றல் தலைவனாக சிவனாகத் தன்னைக் காட்டிக்கொண்டுள்ளான். ஆயினும் மாதவன் தன் காத்திடும் இயல்பினை, அந்த மகாதேவன் உருவத்திலும் காட்டிடவே செய்திட்டான். ஆம், பாற்கடலில் எழுந்த ஆலகால நஞ்சினை, இவ்வையத்தைக் காத்திட, தன் நெஞ்சிலே கொண்டிட்டான். மன்னுயிர்களை நீரில் அமிழ்ந்திடாவண்ணம், கங்கையைத் தன் தலையிலே தாங்கிட்டான். ஹரிஹரனாகவும், சங்கரநாராயணனாகவும் திகழ்ந்திடும் ஐந்தெழுத்து நாயகனான சங்கரனின் வழிபாடு சிந்து சமவெளிநாகரிக காலத்திலிருந்தே இம்மண்ணில் விளங்கிவருகின்றது. குறிப்பாக 'தென்னாடுடைய சிவனே போற்றி' என்றவாறு தென்னிந்தியாவில் சிவனாரின் வழிபாடு மிகவும் வேரூன்றி இருந்ததையே காட்டுகின்றது. கலியும், சிலம்பும், மேகலையும், பத்துப்பாட்டும் முக்கண்ணனின் பெருமையைப் பாடுவதிலிருந்து சங்ககாலத்தில் சைவசமயம் பெற்றிருந்த பெற்றி நமக்கு உணர்த்தப்படுகின்றது. திருநெறி, முன்னெறி, மெய்நெறி என்று போற்றப்பட்ட சைவ சமயத்தின் தத்துவ உண்மையை "ஓர் ஆல் நிழல் ஒண்கழல் இரண்டும் முப்பொழுது ஏத்திய நால்வர்க்கு ஒளிநெறி காட்டினை" என்ற வகையில் சிவபெருமானே விளக்கிய பெருமையுடையதாக சிவநெறி மிளிர்கின்றது. உடலை அழித்து ஆன்ம சுகத்தை அள்ளித்தரும் சிவனாரின் வழிபாடு அன்பின் ஊற்றாகத்திகழ்கின்றது.

'நவ வ்யூஹ ஸ்வரூபி'யான சிவபெருமான் வாழ்க்கைக்குத் தேவையான மங்களம் அமைதி, அன்பு, அழகு தந்து உடன் இவ்வாழ்க்கையின் நிலையாமையை உணர்த்திடும் வகையில், இடுகாட்டையே தன் உவந்தாடும் இடமாகக்கொண்டும், 'நான்' எனும் செருக்கு அழிந்தால் அவன் புனிதனாவான் எனும் வகையில் புலித்தோலையே ஆடையாகக் கொண்டும், குற்றமும், பிழையும் புரிந்தோரைத் தண்டித்து உடன் ஏற்றுக்கொள்ளும் பண்பினால் 'பித்தன்' என்று அழைக்கப்பெற்றும் திகழ்ந்திடும் அவ்வுமையொரு பங்கன் நாளும் தன் லிங்கமேனியாலும், நாடராஜக்கோலத்தாலும், ஜோதி வடிவாலும் அருள் வழங்கி தத்துவப்பொருளாகத் திகழ்ந்திடும் அப்பிறைசூடன் பெருமை சொல்லிமாளாது. மனித விருப்பங்களை நிறைவேற்றி, மறுபடியும் அவ்விருப்பங்கள் மனதில் எழாவண்ணம் உயர்நிலையும் அளித்திடும் நீலகண்டனின் சிறப்பினை, பசு, பதி, பாசத்தின் உண்மைப்பொருளை விளக்கிட்ட பனிமலையானின் அருட்திறத்தை அவனுக்கே உரிய திருநாளான 'மகாசிவராத்திரி' நாளன்று, சமயக்குரவர் நால்வர் கண்டிட்ட வழியில் நின்றொன்றி, அவ் அருமறையோனான அரனின் அடிபணிந்து அனைத்தும் பெறுவோம். அதற்கு அந்த 'வேங்கடேஸ்வரனே' அருள்புரிவானாருக.



### சயனத் திருக்கோலத்தில் ஈடுபாடு

இவருககுச சயனத்திருக்கோலததில் ஈடுபாடு அதிகம். பாம்பணைப் பளளியான சிறப்பை அற்புதமாகப்பாடினார்.

"நாகததணைக் குடந்தை வெஃகா
திருவெவ்வுள்
நாகத்தனை யரங்கம்
பேரன்பில் - நாகத்
தணைப் பாற்கடல் கிடககும்
ஆதிநெடுமால்
அணைப்பார் கருத்த னாவான்"

என்ற பாசுரததில், ஏழு திருபபதிகளில் திருமால சயனிததிருககும அழகை மனமுருகி அனுபவிக்கிறார்.

### திருக்குடந்தையில் ஆழ்வார் அனுபவம்

"திவ்வியப பிரபநதம் விளைந்த திருபபதியான திருக் தாலேலோ" என்று விஷ்ணு சித்தரும, "கோலால் நிரை மேய்தத ஆயனால குடந்தைக்கிடந்த குடமாடி" என்று ஆணடாளும் அனுபவிததவாறு பக்திசாரரும், 'குடநதைமேய கோவலா' என்று அழைத்து அனுபவிககிறார்.

### ஆராவமுதனிடம் ஆழ்வார் பரிவுடன் வினவும் வினா

அரச்சாவதாரத்தில திருமால் நின்றும், இருந்தும், கிடநதும் சேவை சாதிப்பான். கரை புரணட அனபால ஆழ்வார்கள் அவனிடம் கேள்விகள் கேட்டு மகிழவர. "அனறிவ்வுலகம அளந்த அசைவே கொல்!" என்று பேயாழ்வார் கேட்டவாறே, மழிசையர கோனும் அராவமுதனிடம கேளவி கேட்பார.

# பரமனிடம், பக்திசாரரின் பக்திமிக்க பரிவு

டாக்டர் ஏ.வி. ரெங்காச்சாரியார் - ஆழ்வார்திருநகரி.

திருமழிசையில தை மாதம் மகத்தில் அவதரித்த மகான் திருமழிசையாழ்வார். பக்தி மிகுந்து திகழ்நததால் பக்திசாரர எனப்பட்டார். இவர் துய்யமதி பெற்றவர். திருமாலின் பரதவத்தில் ஈடுபட்டார. அர்ச்சையிலும் ஆழஙகாற்பட்டார். இவரை பகவானின் திருவாழியின் அம்சம் என்பர. தமது உபதேசஙகளால் பிற சமயவாதிகளை முறியடித்து ஸ்ரீவைஷ்ணவததை நிலைநிறுத்தியவர.

"யாவராய் நிற்கின்ற தெல்லாம்
நெடுமால் என்று ஓராதார்
கற்கின்ற தெல்லாம் கடை"

என்று பறைசாற்றியவர.

குடந்தை மிக உயரநத திருப்பதி. ஆராவமுதனைத் தமிழ் மறைதநத வளளல - என்று போற்றுவர. 'தராவிட ச்ருதி தர்சகாய நம' என்று வடமொழிவாணரும் பாராட்டுவர். இராவணுதிகளை அழித்த ஸ்ரீராமனே ஆராவமுதனாகச சயனததிருககோலததில அடியவர்கட்குச் சேவை சாதிககிறுன என்பர பெரியோர. வாழ்தொல் புகழார், விளங்கு நூலர் வேத நாவர, நீதியான கேள்வியார நிறைநத திருப்பதி குடநதை. ஆராவமுதன இராமனாகவும், கணணனாகவும் கணடு அனுபவிக்கும ஆழவார அவனது லீலைகளைப் பாராட்டிப பாடுகிறுர். "குடந்தைககிடநதானே நடந்தகால்கள் நொந்தவோ"

என்ற பாசுரம் இதை நன்கு விளக்கும். அன்பரை அரவணைக்காமலும், ஒரு வார்த்தையும் பேசாமலும் கிடக்கும் ஆராவமுதன் ஏதோ அளவற்ற சிரமத்தால் இப்படிக கிடககிறுனோ என்று ஆழ்வார நினைககிறுர. உடனே "உலகஙகளை அளந்ததால் உணடான அசதியோ?" என்று வினவுகிறுர்.

"தாளால் உலகம் அளந்த
அசைவே கொல்
வாளா கிடந்தருளும் வாய்திறவான்"

என்று பாரததசாரதியிடம வினாவினாறபோல, ஆராவமுதனிடம், 'சுவாமி! வடிவி

ணையில்லா மலர்மகள் மற்றை நிலமகள் பிடிக்கும் மெல்லடியால் உலகங்களை அளந்ததால் உண்டான ஆயாசம் தீர உறங்குகிறீரோ? அமரர்கள் சென்னிப்பூவான கழல்களால், பூமியைப் பாயாகச் சுருட்டிச்சென்ற ஹிரண்யாட்சனை அழித்து, பூமியை மீண்டும் விரித்து உதவியதாலான களைப்புத் தீரக் கிடக்கிறீயோ? பொருந்தாற்கைவேல் நுதிபோல் பரல்சாய மெல்லடிக்கள் குருதி சோர, விரும்பாத கான் வழியே ஸ்ரீராமனாக நடந்த களைப்புத் தீர உறங்குகிறீரோ?' என்றெல்லாம் அன்பொழுக வினவுகிறார். ஆழ்வார் ஆராவமுதனிடம் கொண்ட பக்தி விலை மதிப்பற்றது.

'கங்கையில் புனிதமாய காவிரி!' என்றபடி வான் பொய்ப்பினும் தான் பொய்யாது வளப்படுத்தும் காவிரிக்கரைக்குடந்தையுள் அவன் கண் வளர்கிறான். "செழு மாமணிகள் சேரும் திருக்குடந்தை" என்பார் சடகோபர். "ஆராவமுதாழ்வார், மழிசையர் கோன் போன்ற புருஷ ரத்னங்கள் சேரும் குடந்தை" என்பார் உரையாசிரியர். இத்தகைய குடந்தையில் கண்வளரும் பிரானே! எழுந்திரு என்று ஆழ்வார் பிரார்த்திக்கிறார். அத்துடன் ஆறுதலாகப் பேசும்படியும் வேண்டுகிறார். 'பேசு வாழிகேசனே! - என்பது அவர் வாக்கு. 'கிடந்தவாறு எழுந்திருந்து பேசு' - என்றதும் ஆழ்வார் அனுதாபமும் பட்டார். காகாசுரனின் தொல்லை தாங்காது, பிராட்டி ஸ்ரீராமனை எழுப்பி அதற்காக அனுதாபப் பட்டாற்போல், இவரும் நடுங்கி, 'வாழிகேசனே' - என்று வாழ்த்தும் பாடினார். சயனத்திருக்கோலத்திற்குத் திருஷ்டி ஏற்படலாகாது என எண்ணி வாழி என்று மங்களாசாஸனம் செய்கிறார். திருக்கண் வளரும் இந்த அழகு நித்யமாகச் செல்லவேணும் என்பதே இவர் பிரார்த்தனை. இதோ முழுமையான பாடல்.

"நடந்த கால்கள் நொந்தவோ!
நடுங்க ஞாலம் ஏனமாய்
இடந்த மெய் குலுங்கவோ
விலங்குமால் வரைச்சுரம்
கடந்கால் பரந்த காவிரிக்கரைக்
குடந்தையுள்
கிடந்தவாறு எழுந்திருந்து
பேசு வாழி கேசனே!"

இப்பாசுரத்தால் ஆனந்தப் பட்ட ஆராவமுதன் பூரணமாக அனுக்கிரஹம் செய்தான். மழிசையர்கோன் தன்பெயரின் ஒரு பகுதியான ஆழ்வார் என்ற சிறப்புப் பகுதியை ஆராவமுதனுக்குக் காணிக்கையாகச் சமர்பித்து 'ஆராவமுதாழ்வார்' என்று விளங்கச்செய்தார். திருமாலும் தனக்கே உரிய பிரான் என்ற சிறப்புப்பெயரை ஆழ்வாருக்கு வழங்கி, திருமழிசைப்பிரான் என்று திகழச்செய்தான். தான் பக்தபராதீனன் என்பதை ஆராவமுதன் நிலை நிறுத்தினான். ஆழ்வாரின் பாசுரங்களை அனுசந்தித்து அந்தமில் பேரின்பம் அடைவோம். ஆராவமுதனைச் சரணுகதி அடைவோம்.

※※※※※※※※

## ஆந்திரர்களின் சைவ சமயத்தை வெளிப்படுத்தும் நூல்கள்

1) சித்தாந்தப் பிரதிபாலனம்
2) பக்தர்களின் கதைகள்
3) தோத்திரப்பாக்கள்
4) பஸவ புராணம். (சிவபக்தர்களின் சரிதை)

'சதயன்' - காஞ்சிபுரம்.



## சைவத்தின் வகைகள்

| | | |
|---|---|---|
| 1) சாமான்ய சைவம் | - | 6) ஆமக சைவம் |
| 2) சுத்த சைவம் | - | 7) நிராதார சைவம் |
| 3) மிஸ்ர சைவம் | - | 8) சௌட சைவம் |
| 4) வீர சைவம் | - | 9) பாசுபத சைவம் |
| 5) மார்க்க சைவம் | - | 10) காளாமுக சைவம் |

### மொழியால் வேறுபட்டவை

1) திராவிட சைவம் - 2) சமஸ்கிருத சைவம்

'சதயன்' - காஞ்சிபுரம்.

# வைணவ வழக்குச் சொற்களும் பொருள்களும்

டாக்டர். மா. வரதராஜன் - திருப்பதி.

## செ

செககமலம் - செந்தாமரை
செக்கர் - செவ்வானம்; மாலைபபோது சிவப்பாகவுள்ள ஆகாசம்.
செககம் - கோபம்; மரணம்; சிவப்பு
செகுத்தல் - முடித்தலும் சிவத்தலும்; வெல்லுதல்
செக - முடிய
செகில - சிவப்பு
செககர்வேலை - சிவந்த கரை; சிவந்த மண வீடு
செகுடர் - செவிடர்
செகுடு - செவிடு
செங்கச்சு - சிவந்த கசசு; ரவிககை. கஞ்சுகம் கச்சாயிற்று
செங்கண்ணவண்ணன் - மனதிலுள்ள வாத்ஸலய குணத்தால் (தாயன்பு) கணகள் சிவந்து, அதனால் சிவந்த திருக்கண்களையுடையவன்.
செங்கண்மால் - சிவந்த கண்ணையும் அதுககு பரபாகமான கறுத்த நிறததையும் உடையவன். மால்- பெருமை, கருமை, மையல்.
செங்கணளி - சிவந்த கண்ணையுடைய சிஙகம்
செங்கணன் - கோப்பெருஞ்சோழன்
செங்கல்பொடிக்கூறை - காவிஉடை
செங்கலங்கல் - சிவந்த வெள்ளம்
செங்கழிலுழிப் பேராறு - சிவநததாயும கலங்கியுமுளள பெரிய ஆறு
செங்கழுநீரின் வாசிகை - பெருமாளுடைய திருமுடிக்கு அலங்காரமாகச் சாததும செங்கழுநீர்வாசிகை
செங்களம் - சிவந்த யுத்தபூமி
செங்கற்குன்றம் - சிவந்த ரத்னஙகளையுடைய மேருமலை
செங்கற்சீரை - காவிப்புடவை
செங்கற்சீரை வளைத்தல் - சந்நியஸித்திருத்தல்
செங்கீரை ஆடுகை - சாய்ந்தாடுகை; குழந்தை பிறந்த ஐந்தாமாதம் தன் தலையை இங்குமங்கும் அசைந்தாடுகை. பிள்ளைகளுடைய நடன விசேஷங்களில் செங்கீரை என்ற துறை இருப்பதாகக கூறுவர. கீர் என்று பாடடாய் அதுக்கு நல்லதான பாட்டைச் சொல்லித் தாய்மார் பிளளைகளை அசைந்தாடுவிபபது செங்கீரையாடுதலாகும்.
செஙகுனறூர் - மலையாள திவயதேசங்களில ஒன்று. நமமாழவார பாடிய திவய தேசம்
செஙகேழவிரல் - சிவநத நிறமுளள விரல. கேழ-நிறம்
செங்கேழுளை - சிவநத உளைமயிர்; பிடரி மயிர்
செஙகையாளன் - மஹோதரன; அழகான கையையுடையவன.
செஙகொடுகுட்டர் - தாங்கள் அறிந்ததற்கு மேல எதையும் அறியகிலாதவரகள்; விவேகமறறவர்கள்; அளவிட்டு அளிப்பவர்; உலோபிகள.
செங்கோல் - தடங்கலறற ஆணை
செங்கோல் வலவன் - ஆணையை நடத்தவலலவன
செங் கோல் நடாவு தழல் வாயரசு - செங்கோல- எம்பெருமானுடைய ஆணை. அதனை நடாவு-நடததுகிற, தழல் வாயரசு-பிரதாபமுளள சூரியன்; செஙகோல்-சிவநததிரணம், அத்தை நடாவுகிற-வெளிப்படுத்துகிற சூரியன் என்றும சொலலுவர.
செஙகோலரசு - ஆணையை நடத்தும அரசன்; சிவநத கிரணங்களையுடைய சூரியன
செஞ்சடையன் - ருததிரன
செஞ்சாலிவிளை வயல் - செந்நெல்விளையும பூமி
செஞ்சோறு - குளிர்நத தயிர்த்திரள்
செடி - பாபம்; சிக்கு
செடி தீய்ததல் - காடு வெட்டுதல்
செடியார் வினைகள் - தூறு மணடின கர்மம்; செடி போலே செறிந்த பாபம
செடியார் ஆக்கை-அடியார் - செடி-பாபம், ஆரதல்-மிகுதல், பாபம்மிக்கிருக்கிற உடம்பு. அதனை போக்கிக் கொள்ளும் கைவல்ய நிஷ்டர்கள்
செண்டன் - விளையாட்டுக்கருவியையு

| | | |
|---|---|---|
| | | டையவன; ஸவபாவன |
| செண்டுகோல் | - | விளையாட்டுக்காகவுள்ள கைத்தடி |
| செண்டு | - | பூச்செண்டு; பந்து |
| செண்டு சிலுப்புதல் | - | பூச்செண்டைக் குலுக்குதல் |
| செதுக்கு | - | சேறு; பூதம்; மந்தி |
| செதுகு | - | கூளமும் பதரும் |
| செந்தமிழ் | - | செம்மையான தமிழ். தமிழுக்குச் செம்மையாவது - சொல்லின் தோற்றத்திலேயே உள்ளில் கிடக்கும் பொருள் தானே பிரகாசிக்கும்படி இருப்பதாகும். அதாவது பொருளைச் செம்மையாக அளிக்கும் தமிழ். |
| செந்தமிழ் பாடுவார் | - | கலப்பற்ற தமிழ் பாடும் முதலாழ்வார்கள். |
| செந்தலிப்பு | - | சந்தோஷம்; செழிப்பு |
| செந்திறத்ததமிழ் | - | திறம் - கூறும் பாடும் பிரகாரமும். உட்பொருளை பிரகாசிப்பிக்கையே கூறுன தமிழ் |
| செந்து | - | ஒலி; அணு |
| செந்துவர்வாய் | - | மிகச்சிவந்த உதடு |
| செந்தெங்கு | - | செம்மையான இளநீர் மரம் |
| செந்தொண்டை | - | சிவந்த கோவைப்பழம் |
| செந்தொழில் வேதம் | - | நாட்டார்க்கு நன்மை பயக்கும் விஷயங்களைச் சொல்லும் வேதம் |
| செந்நிறுத்தி | - | செவ்வே நிறுத்தி |
| செந்நெற் கூழை | - | செந்நெல் கதிர். கூழை கூழ் என்றாகி செந்நெல் பயிர் (கூழ்- பயிரும், கதிரும்) |
| 1செப்பம் | - | நடுநிலைமை; நேர்மை; சொல்லோம். செப்பமு என்ற தெலுங்குச் சொல் . செப்பம் என்பதற்கு முடிவில் உகரம் சேர்ந்து வந்தது. |
| செப்பமில்லாதார் | - | செவ்வையிலாதார்; மனம், வாக்கு, உடம்பு-மூன்றும் முறை கெட்டிருக்குமவர்கள். |
| செப்பாடு | - | நேர்மை, செம்மை |
| செப்பேடு | - | தாம்ர சாஸனம், ஆதாரம் |
| செப்போது | - | 'செப்பு' என்று சொல்லும்படியான |
| செம்பங்கியெரி விழி | - | செம்பு காய்ந்த நெருப்புப் போல அனல் உமிழ்கிற விழி |
| செம்பனித்தல் | - | கண்மூடுதல் |
| செம்பாடு | - | செம்மண் |
| செம்பவளத்திரள் வாயன் | - | சிவந்த பவளம் திரண்டாற் போல் இருக்கிற திருப்பவளத்தை உடையவன். |
| செம்புளிக்கை | - | தன் முயற்சி விடுகை |
| செம்பாதி | - | சரிபாதி |
| செம்பால் | - | இரத்தம் |
| செம்பியங்கோச் செங்கணான் | - | செம்பியன் என்னும் பெயருடைய ஒரு சோழ அரசன்; சிவந்த கண்ணையுடையவன் |
| செம்பினாலியன்ற பாவை | - | செப்பு விக்ரஹம் |
| செம்புலம் | - | பாலை நிலம்; போர்க்களம்; தினைமுற்றி நுனி பழுத்த அளவிலான நிலம் |
| செம்போத்து | - | செம்போத்துப்பறவை |
| செம்மல் | - | பெருமையும், பழமையும், பூவும் |
| செம்மாது | - | பெரிய பிராட்டியார்; சிவந்த நிறமுடைய மாது |
| செம்மாபாதபற்பு | - | செம் - சிவப்பு, மா கறுப்பு, அகலாய்-உள்ளங்கால் சிவந்து, புறவாய்- புறங்கால் கறுத்திருக்கிற திருவடித்தாமரை, பற்பு-தாமரை |
| செம்மாய் நிற்கும் | - | மெய்யாயிருக்கும் |
| செம்பையைக் கருமை தன்னை | - | யுகந்தோறும் அந்தந்த யுகங்களில் உள்ளவர்க்குத் தக்க வடிவுகளை - கறுப்பு சிவப்புக்களை உடையவனை |
| செம்முதல் | - | மூடுதல் |
| செய்கால் | - | விளைநிலம் |
| செய்கிறுதி | - | செய்யாநின்றாய் |
| செய்குந்தன் | - | செய்யும் தன்மையையுடையவன் |
| செய்யாள் செய்யவள் | - | பிராட்டி |
| செயலறுதியாலே | - | காரியம் வேறு இல்லாமையாலே |
| செய்தகவு | - | பயனைக் கருதாது பண்ணும் உதவி |
| செய்தற்று | - | செய்து |
| செய்மாலை | - | தொடுத்தமாலை |
| செய்யப்பெறாய் | - | செய்யலாகாது காண் |
| செய்யமறையான் | - | ஸர்வேச்வரனை நேரே காட்ட வல்லதான வேதத்தையுடைய பிரமன் |
| செய்யமாமை | - | மணிமாமை-கறுப்பு, செய்ய மாமை சிவப்பல்லவாம், அழகிய நிறம் என்றே பொருள். |
| செய்யவீன்சுடர் வெண்மின் | - | செய்யசுடரை ஈனா நின்றுள்ள வெண்மின். அதாவது எம்பெருமான் வாயில் சிவப்பும் பல்வரிசையில் வெளுப்புமாய்க் கலந்து தோற்றும் போது திருப்பவளமான வாயில் சிவப்பை வெண் பல் வரிசையானது ஈன்றாற் போலே இருப்பதாகும். (ஈனுதல்-உண்டுபண்ணுதல்) |
| செய்யாநிற்புதி | - | செய்யவில்லை; செய்கிறிலை. |
| செயயாய் | - | செயயவேணும் |
| செய்வளவில் | - | செய்யும்போது |
| செய்வகைகள் | - | அனுட்டித்தவை |
| செய்வன செய்து | - | வேண்டியபடி |

| | |
|---|---|
| கொள்ள | செய்துகொள்ள |
| செய்வான் முறை- | செய்வார்க்குச் செய்யும் உரிமை |
| செய்வீசுமான மரங்கள் - | கிளை விரிந்த மரங்கள் |
| செய்லறுதி, செயற்பாலது - | செய்யப்படுவது, செய்யத்தக்கது |
| செயிரில் சொல் - | குற்றமில்லாத சொல் |
| செருக்கடித்திருத்தல் - | கர்வத்தோடு இருத்தல் |
| செலுந்து; செறுந்து - | கொழுந்து |
| செருப்புக்குத்தக் கற்றவோபாதி - | பயனற்றது. |
| செருகு - | சருகு |
| செருநுதல் - | பூசல்தலை |
| செருப்பு வைத்துத் திருவடி தொழுகை | செருப்புக் காலோடு கோயில் சென்றவர் செருப்பைக் கழற்றி வெளியில் வைத்து உள்ளே பெருமாளிடம் போய், செருப்பு பத்திரமாக இருக்க வேண்டுமே, அதை சீக்கிரமாக எடுத்துக்கொள்ளவேண்டுமே - என்ற நினைவால் அர்ச்சகரைப் பார்த்து 'தீர்த்தம் சாதிக்க' என்பதற்கு மாறாக செருப்புசாதிக்க என்பர்களாம். (ஸம்ஸாரிகள் இருக்கும் இருப்பைச் சொன்னபடி) |
| செருவழியாத மன்னர் - | முதுகுகாட்டி ஓடிப்போகாத மன்னர். |
| செல்கதிக்கமைதல் - | செல்லிக்கடவ கதிவுண்டு - பரமபதம் - அதற்கு ஆளாம்படி இருத்தல். |
| செல்கின்ற கங்குல் | செல்லுகிற இரவு |
| செல்வம் - | 'செல்லோம்' என்று மாறிக் கொண்டே இருக்கும் நிலையற்ற சம்பத்து |
| செல்லகிற்பீர் - | செல்லவேண்டியிருப்பீர் |
| செல்லவைத்தனள் - | போனாள். வேகமாகச் சென்றாள் என்றபடி. நாம் அங்கே செல்லும்படி வைத்தாள் |
| செல்லா - | செல்லாது-காசு செல்லாது என்பது போல |
| செல்வர் - | சின்னப்பெருமாள், கோவிலில் பலி ஸாதிப்பதற்கும், திருமஞ்சனம் செய்வதற்கும், சயநம் பண்ணுவதற்கும் ஏற்பட்ட மூர்த்திகளாவர்; கருப்பக்ரஹத்தில் சிம்மாசனத்தில் உள்ள வெள்ளிப்பெருமாளுக்கும் பெயர்; ச்ரிய:பதி |
| செல்வரப்பம் - | ஸ்ரீரங்கம் கோவிலில் மார்கழி மாதத்திருநாளில் அமுது செய்யும் ஒருவிதமான பணியாரம் |
| செலலாதன - | வருங்காலம் |
| செல்லிய செல்கைத்துலகு - | செல்லுகிற செய்கையை உடையது; நடக்கிற வியாபாரத்தையுடையது. |
| செல்வக் கொழுந்து - | கொழுந்துவிடும் செல்வம்; எல்லா சம்பத்துக்களும் கூடிய பெரிய பிராட்டி |
| செல்வர் சொல்லுக்கஞ்சார் - | செல்வம் படைத்தவர்கள் வேண்டினதெல்லாம், நினைத்து எல்லாம் சொல்லுவர். |
| செலவு - | பயன்; பிரயோஜனம்; சிறகு; செல்லுகை |
| செல்லாமை - | தரிக்கமாட்டாமை |
| செலுவு - | வயிறு |
| செவ்வடி - | சிவந்த திருவடி |
| செவ்விமாதிரம் - | அழகிய திக்கு |
| செவ்வைக்கேடர் - | குணமில்லாதவர் |
| செவ்வையன் - | நேர்மையையுடையவன் |
| செவிசீப்பாய்ந்து கிடத்தல் - | ஈடுபட்டுக் கிடத்தல்; கேட்க ஆசையாயிருத்தல்; வாய் புலற்றிக்கிடத்தல் |
| செவிதெரியான் - | திருவனந்தாழ்வான், பாம்புக்கு கண்ணுக்குள்ளேயே காது மறைந்து வெளியில் தெரியாமலிருக்குமாம்; ஒரு இந்திரியத்தாலே எல்லா இந்திரிய வஸ்துக்களையும் அறியுமவன். |
| செவிப்பறைமறைதல் - | ஏகாந்தமாகச் சொல்லுதல்; காதோடு காதாகச் சொல்லுதல் |
| செவிப் பட்டிருத்தல் - | செவியாலே கேட்கும்படி இருப்பது |
| செவிபுதைத்தல் - | செவியினால் கேட்கமாட்டாதிருத்தல் |
| செவியுணவின் சுவை - | செவுக்கு உள்ளில் நாவாலே புல்லாங்குழலில் பிறந்த இசையின் இனிமை. அதாவது செவிக்கு உணவாக இருந்துள்ள இனியகானரஸம் |
| செவியேற்றுலே - | செவியாலே கேட்கையாலே. |
| செழுஞ்சாந்து - | அழகிய சந்தனம் |
| செறித்திட்டு - | அணைகட்டி |
| செறித்து - | நெருக்கிமூடி |
| செறுக்குகை - | விலக்குகை |
| சென்றற்றது - | சென்றுமுடிந்தது; ஜீவிக்க முடிந்ததன்று; துக்கித்தது |
| சென்னாளெந் நாள் - | செல்லுகிற, கூட வருகிற நாள் என்றோ! |
| சென்னியர் - | பாணர்; கூத்தர் |
| சென்னீர் - | குருதி |
| சென்னெற்கூழை - | செந்நெற்பயிர் |



# உய்வு தரும் பொருள்

டாக்டர் சிவ. சண்முகசுந்தரம் - காஞ்சிபுரம்.

பொருள் எனபது பல பொருள் பொதிந்த ஒரு சிறந்த சொல்லாகும். இச்சொல்லுக்குச் சென்னைப் பல்கலைக்கழகத் தமிழ்ப் பேரகராதி முப்பத திரண்டு பொருள்களைத தருகின்றது. அவற்றுள் ஒன்று கடவுள் எனபது. மானிடப பிறப்பின் தன்மையோ பொருள அல்லவற்றைப பொருள என்று உணரதலாய் உளளது.

கச்சியபப சிவாசாரியார், பொருள் அல்லவறறைப் பொருள் எனக்கருதுதல் பேதைத் தன்மையதாம் என்கிறுர. மானிடப்பிறப்பில், "பிறப்பென்னும் பேதைமை நீங்கச சிறப்பென்னும் செம்பொருள காண்பதறிவு" எனகிறது குறள. இக்குறளில் உளள 'செம்பொருள' எனற சொல்லுககு உரை விளக்கம் தரும் பரிமேலழகர், 'தோற்றக் கேடுகள இனமையின் நிதத மாய நோன்மையாற் றன்னை யொன்றுங் கலத்தலின்மையிற நாயதாய்த தானெல்லாவற்றையுங் கலந்து நிறகின்ற முதற் பொருள் விகாரமினறி எஞ் ஞான்றும ஒரு தன்மைத்தாதல பற்றி அதனைச் செம்பொருள் என்றுர்' என்கிறுர.

ஆன்றவிந்தடங்கிய கொள்கைச் சான்றேர்களின் கருத்துப் படி கற்றலின் பயன கடவுளை வணஙகுவது அன்றே. இறைவனை வணங்காது காலம் கழித்தமையை நினைந்து திருநாவுக்கரசர்,

"வாழ்த்த வாயும் நினைக்க
மடநெஞ்சும்
தாழ்த்தச் சென்னியும் தந்த
தலைவனைச்
சூழ்த்த மாமலர் தூவித் துதியாதே
வீழ்த்த வாவினை யேன்நெடுங்
காலமே"

என்று வருந்திக கூறுகிறுர். இதனால் மககளாயப் பிறந்தோர் யாவரும் தம்மைப் படைத்துக காத்துவரும் இறைவனை வாயார வாழ்த்திப் போற்றி வணங்க வேண்டுவது அவசியம் எனபது தெள்ளிதின் புலனாகிறது.

இறைவனனின் பெருமைகளைப் போற்றிப் புகழ்வதற்கு உரிய அரிய மந்திரங்கள் பெரியோர்களால் காலந்தோறும் இடையருது உரிமையுடன் பேணிப் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. அஃதாவது சிவனுக்குச் 'சிவாயநம' அல்லது 'நமசிவாய' என்னும் திருவைந்தெழுத்து மந்திரமும் (பஞ்சாட்சரம்) முருகனுக்குக் 'குமாராய நம' அல்லது 'சரவணபவ' என்னும் ஆறெழுத்து மந்திரமும் (சடாட்சரம்) திருமாலுக்கு 'நாராயணுய நமகா' என்னும் எட்டெழுத்து மந்திரமும் (அட்டாட்சரம்) உரிய



மந்திரங்களாய் உள்ளன. இம் மந்திரங்களே மக்கட்கு உய்வு தரும் பொருளாகும். இம்மந்திரங்களுள் திருமாலின் திவ்விய நாமங்களின் சிறப்பு காணுதலே இங்கு நோக்கமாகக் கொள்ளப் பட்டுள்ளது.

திருமங்கையாழ்வார், தாம் பாடிய பெரிய திருமொழியில்,

"குலந்தருஞ் செல்வந் தந்திடு மடியார்
படுதுய ராயின வெல்லாம்
நிலந்தரஞ் செய்யும் நீள்விசும் பருளும்
அருளொடு பெருநில மளிக்கும்
வலந்தரும் மற்றுந் தந்திடும் பெற்ற
தாயினு மாயின செய்யும்
நலந்தருஞ் சொல்லை நான்கண்டு
கொண்டேன்
நாராய ணாவென்னும் நாமம்"

என்றும்,

"..................சொல்லிலும் நன்றும்
நஞ்சுதான் கண்டீர் நம்முடை
வினைக்கு
நாராய ணாவென்னும் நாமம்"

என்றும் திருமாலின் அட்டாட்சர மந்திரம் கூறுதலின் பயனைத் தெளிவாகப் புலப்படுத்தியுள்ளார்.

இந்த நாராயணா என்னும் நாமத்தின்பால் இரணியன் மகன் பிரகலாதன் கொண்ட பற்றன்றோ நரசிம்ம அவதாரத்தின் சிறப்பினை உலகிற்கு எடுத்துரைக்கக் காரணமாயிற்று.

இருபதாம் நூற்றாண்டில் இந்தியாவின் தேசத் தந்தையாகக் கருதப்படும் காந்தியடிகள் தம் வழிபாட்டில் 'இராம' நாமத்தையே பயன்படுத்தினார் என்பது யாவரும் அறிந்ததே.

ராம நாமமே கற்கண்டு-அதன்
ரசம் அறியார் உளம் கற்குண்டு"

என்னும் பழமொழி இராம நாமத்தின் அருள் நலனைத் தெளிய வைக்கின்றது.

கம்பராமாயணத்தில் வாலி, தன் மார்பில் பாய்ந்த அம்பு யார் தொடுத்தது என்பதனை அறிய அவாவி மிகுதியாகி முயன்று பார்த்த பொழுது, 'இராமன் என்னும் ஈறிலாப் பதங்கள்' தரும் பெயரைக் கண்டான் என்று கூறும் கம்பர் அப்பாடலிலேயே இராம நாமத்தின் சிறப்பினை,

"மும்மைசால் உலகுக்கு எல்லாம்
மூலமந்திரம்
தம்மையே தமர்க்குநல்கும்
தனிப்பெரும்பதம்
இம்மையே எழுமை நோய்க்கும்
மருந்து"

என்கிறார். இத்துடன் கம்பராமாயணத்திலேயே பாயிரப்பாடலில் மிகைப்பாடல்களாக வரும் ஒருபாடலில் இராம நாமத்தின் சிறப்பு,

"நன்மையும் செல்வமும் நாளும்
நல்குமே
தின்மையும் பாவமும் சிதைந்து
தேயுமே
சென்மமும் மரணமும் இன்றித்
தீருமே
இம்மையே இராம என்று
இரண்டு எழுத்தினால்"

என்று சொல்லப்பட்டுள்ளதும் அறியத்தக்கது.

இராம என்று ஒருமுறை உச்சரித்தால் அது 'நாராயணாய நம' என ஆயிரம் முறை சொல்லிய பயனைக் கொடுக்கும் என்று கூறும் பாடலும் உண்டு. அப்பாடல் வருமாறு:

"சீராமன் பேர் ஒருகால்
செப்பினது திருமால்
ஓராயிரம் பேருக்கு ஒப்பாமல்
ஓராமல்
நேர்ந்த பிறவிநோய் நீக்கி
நிலையருளும்
ஆர்ந்த அமுதம் அது"

இருபதாம் நூற்றாண்டின் இணையற்ற கவிஞரான பாரதி, தாம் பாடிய பாஞ்சாலி சபதத்தில் திரௌபதி, அரச சபையில் தனக்கு ஏற்பட்ட நிலைமையை நினைந்து தம் உள்ளத்தில் ஒளி வடிவமாக விளங்கும் இறைவனுடன் கலந்து உலகத்தை மறந்து ஒருமுகப்பட்ட எண்ணத்துடன் 'அரி' நாமத்தை முழங்கியதாகக் கூறுகிறார். அவள் குறைகளையப்பட்டு மானம் காக்கப் பட்டு அருள்புரியப்பட்ட நிலைமையில்,

"முன்னிய அரிநாமம் தன்னில்
முழுநற் பயனுல கறிந்திடவே"

என்று பாடுகிறார் பாரதியார். இப்பகுதியில் பாரதியார், அரி நாமத்தினால் திரௌபதிக்கு நேர்ந்த இன்னல் அற்றுப் போய்விட்டதையும் அரிநாமத்தின் சிறப்பையும் உலகிற்கு உணர்த்துகிறார்.

மானிட வாழ்வில் மானுடம்பு உய்வு பெற ஏகநாயகனாக விளங்குகின்ற இறைவனை அவரவர் தத்தம் இந்து சமய நெறிக்கேற்ற- கடவுளுக்குரிய திருமந்திரங்களைச் சொல்லி அவனருள் பெறுவார்களாக.

"........................உய்வதோர் பொருளால்
உணர்வெனும் பெரும்பதம்
தெரிந்து
நாடினேன் நாடி நான்கண்டு
கொண்டேன்
நாராய ணாவென்னும் நாமம்"
—திருமங்கையாழ்வார்



# திருப்பாவையில் திருநாமச் சிறப்பு

திரு. வி.ஜி. சொக்கலிங்கம் - திருப்பதி.

சங்கத் தமிழ் மாலையான திருப்பாவையில் எம்பெருமானைபபறறி அவன குணஙகளை வாயிலாகவும, அநத குணஙகள் செயவிதத வீரச்செயலகளை வாயிலாகவும் ஆண்டாள் இட்ட திருநாமங்கள பலப் பல. 'கட்டிப் பொன்போலே அவன பணிப் பொன்போலே அவன் திருநாமம்' என்பர பெரியோர். அந்த வகையில எம்பெருமானுடைய திருநாமங்கள் சிறப்புடையன.



பிஞ்சியிலேயே பழுத்த ஆண்டாள் மானிடவர்க்கென்று வாழ மாட்டாத தன்மையுடையவளாய் கண்ணனைக் கண்டு அவனுக்கு கைங்கர்யம் செயவதிலேயே நோக்குடையவளாய் இருக்கிறாள். இவள் அருளிய திருப்பாவையின் கருத்தாவது இந்த ஆத்மா உள்ளளவும் ஒரு துன்பமும் அடையாமல் எம்பெருமானுக்கே தொண்டு செய்யப் பெறவேண்டுமென்பதாகும். இதைக் கருத்தில் கொண்டு ஆண்டாள் அருளிய திருப்பாவையில் திருநாமங்கள் பொலிவு பெருகின்றன. இதற்கு பெரியவாச்சானபிள்ளை, அழகிய மணவாளப்பெருமாள் நாயனார முதலானோர் உரை வகுத்துள்ளனர். அவற்றில் சிலவற்றை அனுபவிப்போமாக.

ஆய்ப்பாடி பெண்களைச் சொல்லும் பொழுது 'செல்வச் சிறுமீர்காள்' என்று அழைக்கிருள். சிறுமிகளுக்குச் செல்வமாவது கண்ணனோடு ஒக்க ஆய்ப்பாடியில் பிறந்ததை எண்ணியே சொல்லுகின்ருள்.

கண்ணன் பிறப்பதற்கு முன்பு நந்தகோபன் எறும்பையும் சாவ மிதியாத சாதுவாக இருந்தார். கண்ணன் பிறந்த பின்பு தொட்டிலிலே குழந்தையை இருத்தி அவனுக்கு கம்சனால் ஆபத்து வராமல் பயந்து வேலை புகரெழுத்தீட்டிப் பிடித்திருப்பார். இதுபற்றியே நந்தகோபனை 'கூர் வேல் கொடுந்தொழிலன்' என்கிருள் ஆண்டாள். அப்படிப்பட்ட

நந்தகோபனிடம் கண்ணன் பவ்யனாக இருக்கிறான். இதுபற்றி 'நந்தகோபன் குமரன்' என்று திருநாமம் இடுகிறாள். ஆனால் அன்னையான யசோதையிடம் தான் கற்ற வித்தைகளையெல்லாம் காட்டுவார்; ஆகையாலே கண்ணனை மாறாமல் பார்த்ததினால் அவன் கண்ணழகையெல்லாம் தன் கண்ணிலே குடிகொண்ட யசோதைக்கு 'இளம் சிங்கம்' என்று சொல்லுகின்றாள்.

அப்படிப்பட்ட கண்ணன் மேகம் போன்ற கறுமைநிற திருமேனியைக் கொண்டும் சிவந்த கண்ணுடையவனாகவும் இருக்கின்றான். மேலும் ஒளிவிடுகின்ற முழுமதி போன்ற முகத்தையும் உடையவன். இவற்றைச் சேர்த்தே 'கார்மேனிச் செங்கண், கதிர்மதியம் போல் முகத்தான்' என்கிறாள் ஆண்டாள். ஆயப்பாடியில் கண்ணனாய் பிறப்பதற்கு முன்பு அயர்வரும் அமரர்களுக்கு அதிபதியானவன் விண்ணுட்டுக்கும் மண்ணுட்டுக்கும் தலைவனுமாவான். அறிவுள் பொருளென்ன, அறிவில் பொருளென்ன ஆகிய இரண்டையும் இயங்க வைப்பவன். ஞானம், சக்தி முதலான குணங்களென்ன, தாயன்பு, எளிவந்த தன்மை, அறப்பெரியவன் அறம்தாழ்ந்தவனோடு புரையறக் கலக்கும் தன்மை முதலான குணங்களென்ன இவற்றுக்கெல்லாம் இருப்பிடமான பெயரையுடையவனை 'நாராயணன்' என்கிறாள் ஆண்டாள்.

எம்பெருமான் பரமபதத்தில் இருக்கும் நிலையை எண்ணி 'மாயன்' என்று சொல்லுகின்றாள். அப்படி இருக்கும் மாயன் பரமபதத்தைவிட்டு வடமதுரையிலே மிடுக்குதோற்ற பிறந்தான். இதுபற்றியே 'வட மதுரைப் பிறந்த மைந்தன்' என்கிறாள். அந்த மிடுக்கு தோற்ற செய்த செயல்களோ பல பல. கண்ணனும் கோபியர்களும் களித்து விளையாடிய இடம் யமுனை. அந்த யமு1னையிலே ஒருவருக்கொருவர் நீரைக்கொப்பளித்து விளையாடுவர். பெண்கள் படும் துறையல்லவா கண்ணன்படும் துறையுமாயிற்று. அவர்கள் வாய்நீரல்லவா யமுனையைத் தூய்மை செய்தது. இது தோற்ற 'தூயபெருநீர் யமுனைத் துறைவன்' என்கிறாள் ஆண்டாள். யசோதையோ ஆயர்குலத்துக்கு விளக்குபோன்றவள். அந்த விளக்குக்கு அணி சேர்க்க வந்தவன் ஆயர்மகனான கண்ணன். இது பற்றியே 'ஆயர்குலத்தில் தோன்றும் அணிவிளக்கு' என்கிறாள் ஆண்டாள். அவன் யசோதையிடம் கண்ணிநுண் சிறுதாம்பினால் கட்டுண்டு தன் அழகையெல்லாம் தாய் அனுபவிக்கும்படி இருந்தான். இதுபற்றியே 'தாயைக் குடல்விளக்கம் செய்த தாமோதரன்' என்று சொல்லுகிறாள் ஆண்டாள்.

திருப்பாவையை வேதமனைத்துக்கும் வித்து என்பர். அந்த வேதம் போற்றிய எம்பெருமானை ஆண்டாள் சொல்லும்போது 'வெள்ளத் தரவில் துயில் அமர்ந்த வித்து' என்ற திருநாமம் இடுகிறாள். அதாவது, எம்பெருமான் தன்னுடைய அடியவனான திருவனந்தாழ்வான் மேல் படுத்திருக்கிறானாம். அத்திருவனந்தாழ்வான் மென்மையாகவும், குளிர்ச்சியாகவும், நாற்றங்களுடையவனாகவும் இருப்பர். அவர் மூச்சுபட்டு மதுகைடபர்கள் மடிந்தார்கள் அன்றோ. இப்படிப்பட்ட பெருமை பொருந்திய திருவனந்தாழ்வானோ கடலின் நீர் எம்பெருமானுக்கு உறுத்தாமைக்குப் படுத்த படுக்கையாக இருப்பர். இவன்மேல் எம்பெருமான் உலகத்தைக் காப்பதற்காக கள்ள நித்திரைக் கொள்ளுகின்றான். அருகில் இருக்கும் பிராட்டிமார்கள் திருமுலைத் தடத்தாலே நெருக்கினாலும் உணராது உலகைக் காக்க துயில்கின்றான். திருவவதாரத்திற்கு நாற்றங்காலன்றோ! திருப்பாற்கடல். பிறந்த பிறவிகள் போறாமையாலே மறுபடியும் பிறக்கைக்கு அடியிட்டபடியைச் சொல்லுகிறாள் "வித்து" என்ற சொல்லாலே.

கண்ணன் தன்னுடைய வியப்பான திருவிளையாடல்களாலே இளம்பெண்களை எழுதிக் கொண்டு அவர்கள் விருப்பத் திற்கேற்ப அடங்கியிருப்பவன். இதுபற்றியே 'மாமாயன்' என்கிறாள். இப்படிப் பெண்களை அடிமைகொண்டது மட்டுமன்றிக்கே ஆண்களையும் அடிமைக் கொண்டு ஒரு நாட்டுக்காக (பரமபதம்) கையாளாய் இருக்கின்றான். இதனால் 'வைகுந்தன்' என்று சொல்லுகின்றாள். இப்படி மேன்மைக்குக் காரணமான வைகுந்தன் என்ற திருநாமமென்ன, நீர்மைக்கு காரணமான 'மாமாயன்' என்ற திருநாமமென்ன இவ்விரண்டுக்கும் ஒப்பான பிராட்டியோடு கூடியிருக்கும் தன்மையான 'மாதவன்' என்ற திருநாமம் முதலாக ஆயிரக்கணக்கான திருநாமங்கள் எம்பெருமானுக்கு உளவன்றோ. விரிவுக்கஞ்சி இத்துடன் அமைகிறேன். பெரியோர்கள் குற்றம் களைந்து பொறுத்தருள வேண்டுகிறேன்.

நாம் ஒவ்வொருவரும் ஒரு ஸதாசாரியனை அடைந்து அவர்மூலமாக தத்வ, ஹித, புருஷார்த்தங்களைத் தெரிந்து கொள்ளவேண்டும். நமக்கு புருஷார்த்தம் ஸ்ரீமந் நாராயணனே. அவனை அடைவதே மோக்ஷம் எனப்படும். மோக்ஷமடைவதற்கு பக்தி, ப்ரபத்தி மார்க்கங்கள் உள்ளன. இக்கலி காலத்தில் நம்மால பக்தி மாரக்கத்தைக் கடைபிடிகக முடியாது. மிகவும் கடினமானது பக்தி மார்க்கம். மிகவும் சுலபமான மார்க்கம் பிரபத்தி. இதையே பரண்யாசம், சரணகதி என்கிறோம்.

நாம் ஒவ்வொருவரும் ஒரு ஸதாசாரியன் மூலமாகத்தான் ப்ரபத்தி பண்ணவேண்டும். ப்ரகளையும், தான செய்துள்ள அபராதங்களையும் உணர்நது அவற்றுக்காக வருந்துதல்.

(5) கோபத்ருதவ வரணம்: தனது தோஷங்களை மன்னிதது, தனனை மன்னிதது ஏற்றுக்கொள்ளும் படி ப்ராரததித்தல்.

சிலர ஆதம நிக்ஷேபணததை ஆறுவது அங்கமாகக கொள்கின்றனர். அதாவது இந்த ஆத்மாவை பகவானிடத்தில் ஒப்படைத்தல். ஆத்மாவை அவனுக்கு நிவேதனப் பொருளாக ஸமர்ப்பித்தல்.

இதற்கு பர ஸமரபபணம், பரந்யாஸம், ஆத்ம ஸமர்ப்பணம் என்றும் சொல்வார்கள்.

மாக 101 நாடிகள் உள்ளன. இந்த நாடிகளிலிருந்து மெல்லிய 72,000 சிறு நாடிகள் நம் தேகத்தில் வியாபித்து உள்ளன. இந்த 101 நாடிகளில் ஒன்று மட்டும் ஹ்ருதய கமலத்திலிருந்து மேல்நோக்கி சிரஸுக்குப் போகிறது. மற்றவை பக்கவாட்டிலும் கீழ்நோக்கியும் செல்கின்றன.

பர்யங்க வித்யை

ஜீவன் வெளியேறுமுன், ஞானேந்திரியங்கள் ஐந்தும, கர்மேந்திரியங்கள் ஐந்தும் மனஸில் ஒடுங்குகின்றன. இந்த மனஸு முக்கியப் பிராணனில் (காற்று) ஒடுங்குகிறது. இந்த முக்கியப் பிராணன் ஜீவாத்மாவில் ஒடுங்குகிறது. இந்த ஜீவாத்மா கடைசியாக பஞ்ச

# ஸ்ரீவைகுண்ட நித்யாநுபவ அநுஸந்தானம்

திரு. சி.ஆர். திருவேங்கடத்தான் - திருச்சி.

பத்தி ஸதாசாரியனை புருஷகாரமாக வைத்துச் செய்வதே சாலச் சிறந்தது. அது ஐந்து அங்கங்கள் கொண்டது.

(1) ஆநுகூல்ய ஸங்கல்ப்பம்: எம்பெருமான் உகந்தருளக் கூடிய அநுகூலமான காரியங்களையே செய்தல்.

(2) ப்ராதி கூல்ய வர்ஜ்ஜனம்: பகவானுக்கு பிராதி கூலமான கார்யங்களை செய்யாதிருத்தல்.

(3) மஹாவிஸ்வாஸம்: ஸர்வேஸ்வரன் நம்மை என்றும் கைவிடமாட்டான், கண்டிப்பாக காப்பாற்றுவான் என்ற திடமான நம்பிக்கை.

(4) கார்ப்பண்யம்: தன்னுடைய சிறுமையையும், தோஷங்

இவ்வகை அதிகாரிகளுக்கு ப்ரபன்னர் என்று பெயர். இப்பிரபன்னன் பாகவத அபசாரம் பட்டாலோ, தேவதாந்திரத்தின் மேல் ஈடுபட்டாலோ ப்ரபத்தி பலிக்காது. இதை முக்கியமாக ப்ரபன்னன் கொள்ளவேண்டும்.

ஸ்ரீமந் நாராயணன் ஒருவனே தெய்வம். அவன் ஒருவனாலேதான் மோக்ஷ ஸாம்ராஜ்யம் அளிக்க முடியும். ஆகையால் ப்ரபன்னன் பாகவத அபசாரம் ஏற்பட்டாலும், தேவதாந்திர (க்ஷுத்ர தெய்வங்கள்) ஸபர்ஸமோ ஏற்படாமல் பார்த்துக் கொள்ளவேண்டும்.

இந்த ஜீவன் தான் எடுத்துள்ள தேகத்திலிருந்து வெளியேறுவதே மரணம் எனப்படும். நம் தேகத்தில் பிரதான

பூதங்களில் சேரகிறது. இது வரை சொல்லியது எல்லா ஜீவன்களுக்கும் பொது.

ப்ரபன்னனுக்கு இந்த ஜீவன் வெளியேறுமுன் ஒரு ஒளி தோன்றி ப்ரகாசத்தைக் கொடுக்கிறது. அதன் வழியாக இந்த ஜீவன் 101வது நாடியான ப்ரம்ம நாடி (இதை ஸுசும்னாநாடி என்றும், மூர்த்தன்ய நாடி என்றும் சொல்வார்கள்) வழியாக சிரஸை நோக்கிச் செல்கிறது. அங்கு இந்த பூத ஸரீரத்தைவிட்டு, ஸூக்ஷ்ம சரீரத்தை எடுத்துக்கொள்கிறது. ப்ரபன்னன் செய்த கர்மங்களின் பலனான புண்ணிய பாபங்கள் முறையே அநுகூலர்களுக்கும் விரோதிகளுக்கும் போய்ச் சேர்கின்றன. இப்படி கர்மங்கள் கழிந்த இந்த ஜீவாத்மாவை பக

வான் தன்னிடம் சற்று இளப் பாற்றி, அர்ச்சிராதி கதியில், ஆதிவாஹிகர்களைக் (தேவதைகள்) கொண்டு தானே அழைத்துச் செல்கிறான்.

இந்த ஆதிவாஹிகர்கள் என்று அழைக்கப்படும் தேவதைகள் முறையே அக்னி, பகல், ஸுக்ல பக்ஷம், உத்தராயணம், ஸம்வத்ஸரம், வாயு, ஸுர்யன், சந்திரன், மின்னல், வருணன், இந்திரன், ப்ரஜாபதி ஆகிய அந்தந்த மண்டலத்தின் அதிஷ்டான தேவதைகள், ஒவ்வொரு தேவதையும் வரிசைக் கிரமமாக ப்ரபன்னனை அவரவர் லோகங்களில் உபசாரத்துடன் அழைத்து, ஸர்வவித உபசாரங்களையும் செய்து தங்கள் தங்கள் எல்லையில் கொண்டு வருகிறார்கள்.

பகவான் பிறகு தேச விசேஷத்தை அடைவித்து, நடப்பதற்காக இது வரை நிறுத்தியிருந்த ஸூக்ஷ்ம சரீரத்திலிருந்து ஜீவனை விடுவித்து, விரஜா நதிக்கு அக்கரையில் சேர்த்து அப்ராக்ருத சரீரம் அளிக்கிறான். பிறகு ஐரம்மதீயம் என்னும் ஸரஸ்ஸில் தீர்த்தாமாடுகிறான் ப்ரப்பன்னன். ஸோம வஸனம் என்னும் அஸ்வத்த விருக்ஷத்தை அடைகிறான்.

பகவான் ஐந்நூறு திவ்யா ப்ஸரஸ்ஸுக்களை அனுப்பி, பிரபன்னனை எதிர்கொள்ளச் செய்து, ஜீவனை ப்ரம்மா லங்காரங்களால் (பகவானைப போலவே) அலங்கரிக்கிறான். இங்கு பிரப்பன்னனுடைய உடம்பில் ப்ரஹ்ம கந்தம், ப்ரஹ்ம ரஸம், ப்ரஹ்மதேஜஸ் நுழைகின்றன. பிறகு அமானவன் கைலாகு கொடுத்து அழைத்துச் செல்கிறான். இந்திரன் பிரஜாபதி பெயர்களுடைய துவாரபாலகர்களைக் கடந்து ஸ்ரீவைகுண்டத்தில் நுழைகிறான்.

ஸ்ரீமந்நாராயணன், ஸ்ரீமஹாலக்ஷ்மியுடனும், பூதேவி, நீளாக தேவிகளுடன் எழுந்தருளியிருக்கும் ஸ்வர்ணமயமான பர்யங்காஸனத்திற்கு (தர்மாதி பீடம் எனப்படும்) வருகிறான். ஸ்ரீமந்நாராயணன் ப்ரபன்னனை பர்யங்காஸனத்தில ஏற்றுவித்து அவனுடன் ஸம்வாதம் செய்கிறான்.

ப்ரபன்னன் பரமாத்ம ஸாம்யத்தை அடைகிறான். அங்கு ஸர்வ வித கைங்கர்ய மனோரதனாய் கொண்டு நித்ய கைங்கர்யம் விஷ்வக்ஸேனரின் ஆக்ஞைபடி செய்து சந்தோஷமடைகிறான். பகவான தன்னைக் காட்டிக்கொடுத்துத் தன் ஸ்வபாவங்களைத் தந்து, தனக்கு சமமான போகத்தைத் தந்து, நித்ய ஸூரி கோஷ்டியில் சேர்த்து, இவன் செய்யும் கைங்கர்யங்களையும் மகிழ்வுடன் ஏற்றுக் கொள்கிறான்.

இவ்விதமாக ஒரு ஜீவன் மோக்ஷோபாயத்தை அனுஷ்டித்து அர்ச்சிராதி மார்க்கத்தினால் பரமபதம் சென்று அங்கு பரமாத்வோடு பேசி ஆனந்தத்தை அடைகிறான் என்னும் விஷயத்தை (பர்யங்க வித்தை எனப்படும்) தினமும் நாம் அநுஸந்தானம் செய்யவேண்டும்.

பிரக்ருதி ஸம்பந்தம் நீங்கி 26-வது தத்துவமான எம்பெருமானைக் காணும் முமுக்ஷு ஸகல ஸித்தியையும் பெற்று விடுவதால் மறுபடி பிறப்பதில்லை. மோக்ஷத்தை விட்டு "ந ச புனராவர்த்ததே" என்று கர்ம சம்பந்தமான ப்ரக்ருதிக்கு திரும்பி வருவதில்லை.

अनावृत्ति शब्दादनावृत्तिः शब्दात्

(ப்ரம்ம ஸூத்ரம் 4-4-22)

என்று வியாஸர் கூறுகிறார்.




## தமிழில்

### வைணவ, சைவ சமயம் பற்றி அறியத் துணை செய்யும் நூல்களும், காலமும்

கி.மு. 600 - கி.பி. 600 - சங்ககால நூல்கள்
கி.பி. 600 - கி.பி. 700 - ஸதல புராணங்கள்.
கி.பி. 900 - கி.பி. 1200 - சமய வளர்ச்சிக்கான நூல்கள்.
கி.பி. 900 - கி.பி. 1200 - கம்பர், சேக்கிழார் நூல்கள்.
கி.பி. 16ஆம் நூற்றாண்டு - சிறு பிரபந்தங்கள்.
கி.பி. 1600 - 1800 பக்தி இலக்கியங்கள். (அருணகிரி, தாயுமானவர் போன்றோரின் அருட்பாடல்கள்)
கி.பி. 1800 - 2000 நவீன காலப்புலவர்களின் பல சமயப் பாடல்கள்.

'சதயன்' - காஞ்சிபுரம்.

(தொடர் கட்டுரை)

# நாலாயிரத்தில் நற்பறவைகள்

திரு. ஆர்.டி. சாரி - கோம்பூர்.

## அன்னம் :

அன்னம் ஒரு தெய்வப்பறவை. நீரும் பாலும் கலந்த பாத்திரத்தில் நீரை அகற்றிப் பாலை மட்டும் பிரித்துண்ணும் பண்புடைய சீரிய பறவை.

முன்னொருகால் பிரளயகாலத்தில் நான்முகன் துயிலுகையில் அவன் முகங்களிருந்து வெளிப்பட்டு ஆணுருவில் நால் வேதங்களும் உலாவிக்கொண்டிருந்தன. அருந்தவங்கள் புரிந்த கோமுகாசுரன் அவ்வருமறைகளைக் கவர்ந்து ஆழ்கடலுள் சென்றான். அதனையறிந்த ஸ்ரீமன் நாராயணன் அவதாரங்களில் முதல் அவதாரமான மச்சாவதாரம் எடுத்து கோமாகாசுரனை வென்று வேதங்களை மீட்டு, அன்னனமாகி அருமறைகளை நான்முகனுக்கு அறிவித்தான். இத்தனிப் பெருஞ்செயலை ஆழ்வார்கள் பாடி, திருமாலை அன்னப்பறவை உருவில் போற்றிய பாசுரங்களைப் படிப்பது நமக்கு நற்பேறு.

அன்னப்பறவையைப் பாடாத புலவர்களே இல்லையென்றால் மிகையாகாது. ஆழ்வார்களும் தங்கள் பாசுரங்களிலே அன்னப் பறவையையும் அதன் நடையையும் புகழ்ந்து பாடியுள்ளார்கள்.

## பெரியாழ்வார் :

அவற்றிலே திருமாலின் பத்து அவதாரங்களில் சில சிறப்பான அவதாரங்களைப் பாடுகின்ற பெரியாழ்வார் திருமொழியில் ஒரு பாசுரத்திலே:

"அன்னமும் மீனுருவும் ஆளரியும் குறளும்
ஆமையும் ஆனவனே!
. . . . . . . . . . . . . . . . . .
ஆடுக ஆடுக' எ[illegible]ம்,

"அன்ன நடைமடவாள் அசோதை உகந்த பரிசு" என்றும்,

அருமறைகளை இவ்வுலகுக்கு மீட்டுக்கொடுதத திருமால் அன்ன உருவாய் சென்றதைப் பாடும் மற்றொரு பாசுரத்தில்,

"துன்னிய பேரிருள் சூழ்ந்துலகைமூட
மன்னிய நான்மறை முற்றும் மறைந்திட
பின்னிவ் வுலகினில் பேரிருள் நீங்க அன்று
அன்னம தானானே! அச்சோ அச்சோ!
அருமறை தந்தானே! அச்சோ! அச்சோ!

என்றும் பாடுகிறார்.

## திருமங்கையாழ்வார் :

திருமங்கை மன்னன் பெரிய திருமொழியில் அஷ்டாக்ஷர மந்திரத்தின் பெருமையைப் பாடுகின்ற முதல் பத்திலே:

"தூ விசேர் அன்னம் துணையொடும் புணரும்
சூழ்புனல் குடந்தையே தொழுது என்
நாவினால் உய்ய நான் கண்டு கொணடேன்
நாராயணாவென்னும் நாமம்"

இப்படி அன்னப்பறவை தமது துணையோடு செந்தமிழ் நாட்டிலே இருந்ததாக ஆழ்வார்களின் பாடல்களிலே தெரிகிறது. இன்றோ இப்பறவை காண்பதற்கு அரிதாகிறது. அன்னம் காண்பதற்கு அரிதானாலும், அந்த அன்னநடை உடைய ஆழ்வார்தம் பாடல்கள் நம்முன்னே அன்னத்தை காட்டுகின்றன.

திருவிடவெந்தை நித்திய கல்யாண இறைவனைப் பாடுகையில்,

"அன்னமும் மீனும் ஆமையும் அரியும்,
ஆயஎன் மாயனே! அருளாய்"

என்று அன்னப்புள் வடிவில் வந்து நான்மறையைத் தேடித் தந்த திருமாலை கண்முன் கொண்டு வருகிறார்.

தேவநாதன் கோயில் கொண்டுள்ள திருவயிந்திரபுரத்தில்,

அன்னமாமலர் அரவிந்தத் தமளியில்
பெடையோடும் இனிதமர"

என்று பாடுகிறார்.

இன்னொரு பாசுரத்தில்:

"அன்னம் மன்னும் வயல்
அணிஆலியம்மானே"

என்று பாடுகின்றார்.

உடன் போக்கில் சென்ற தலைமகளைக் குறித்து தாய் இரங்கும் பாடல்களில்,

"வேயன தோள்விசிறிப் பெடை-
யன்னம் என நடந்து"

என்றும்,

"புன்னையும் அன்னமும் சூழ்
புனலாலி புகுவர்கொலோ?"

என்றும்,

"தூவிசேர் அன்னம் அன்னநடையாள்
நெடு மாலொடும்போய்"

என்றும் போற்றுகின்றார்.

திருநாங்கூர் மணிமாடக்கோயில் கொண்டவனைப் பாடுகின்ற பாசுரத்தில்,

"பெடையோடு செங்கால் அன்னம்
துகைப்பத்
தொகைப்புண்டரீகத் திடைச்

செங் கழுநீர்"
என்கின்றார்.

திருமங்கையாழ்வாருக்கும், திருநறையூருக்கும் நெருங்கிய பந்தம் உண்டு. ஆழ்வாருக்கு பரிபூர்ண ஸ்ரீநிவாஸன் ஆசார்ய உறவும் உண்டு. இங்குப் பறவை இனங்களைப் பற்றிப் பாடுகின்றபோது,

"பெடையோ டன்னம் பெய்வளை
யார்தம் பின்சென்று
நடையோ டியலி நாணியொளிக்கும்
நறையூரே"
என்றும்,

"நெகுவாய் நெய்தல் பூமது
மாந்திக் கமலத்தின்
நகுவாய் மலர்மேல் அன்னம்
உறங்கும் - நறையூரே"
என்றும் பாடுகின்றார்.

சோழவளநாட்டிலே திருச்சேறை ஸாரநாயகி சமேத ஸாரநாதனை பாடுகின்ற போது,

"பூமாண்சேர் கருங்குழலார் போல்
நடந்து
வயல்நின்ற பெடையோடு
அன்னம்
தேமாவின் இன்னிழலில்
கண் துயிலும்
தண்சேறை யம்மான் தன்னை"
என்கின்றார்.

ஆமருளியப்பனைக் கோயில் கொண்ட தேரெழுந்தூரைப் பாடுகின்றபோது,

"அன்னம் பெடையோ டுடனாடும்
அணியார் வயல்சூழ் அழுந்தூரே"
என்றும் கூறுகின்றார்.

திருமங்கையாழ்வார் மாயனை அழைக்கப் பறவைகளை அழைத்துப் பாடும் 10 பாடல்கள் அழகானவை. பெரிய திருமொழி 10-ஆம் பத்தில் 10 பாடல்களில் இதன் சுவையைப் படித்துக் காணலாம்.

"பொன்னங் கலையல்குல் அன்ன
மென்னடைப் பூங்குழல்
பின்னை மணாளர் திறத்தம்
ஆயின பின்னையே"
என்கின்றார்.

இன்று அன்னமோ, மயிலோ இத்தலங்களிலே கண்ணில் படுவதே இல்லை. இவைகள் எங்குச் சென்று மறைந்தனவோ? ஆயினும், ஆழ்வார்களின் கவிகளிலே இவைகள் நம் கண் முன்னே வருகின்றன.

திருநாகை இறைவனைப் பாடுகின்ற பாசுரங்களில்:

"அன்னமும் கேழலும் மீனு மாய"
என்று நாகையழகரை அவருடைய அழகை வர்ணிக்கின்ற பாடல்கள் அற்புதமானவை.

"அன்னநடைய அரம்பையர்தம்
கைவளர்த்த
இன்னிசையாழ்ப் பாடல் கேட்டு
இன்புற்று" என்றும்
"மான்நோக்கின் அன்னநடையார்
அலரேச ஆடவர்மேல்
மன்னுமடலூ ரார்ரென்பதோர்
வாசகமும்" என்றும்
"இன்னிள வஞ்சிக் கொடியொன்று
நின்றதுதான்
அன்னமாய்மானாய் அணிமயிலாய்"
என்றும் பாடுகின்றார்.

நாராயணனின் அவதாரங்களைப் பாடிய பாடலில்,

"தன்னைப் பிறரறியாத் தத்துவத்தை
முத்தினை
அன்னத்தைமீனை அரியை
அருமறையை" என்றும்,

"அள்ளல்வாய் அன்னம் இரதேர்
அழுந்தூ ரெழுஞ்சுடரை"
என்றும் பாடுகின்றார்.

"மின்னுமா மழைதவழும் மேகவண்ணா!
விண்ணவர்தம் பெருமானே!
அருளாயென்று
அன்னமாய் முனிவரோடமர ரேத்த
அருமறையை வெளிப்படுத்த
வம்மான் றன்னை"
என்று திருமங்கையாழ்வார் பாடி முடிக்கின்றார்.

## நம்மாழ்வார் :

திருவிருத்தத்தில் சடகோபர், தலைவி அன்னத்தை வெறுத்துரைக்கும் பாசுரமாவது:

"இன்னன்ன தூது எம்மை ஆள்
அற்றப்பட்டு இரந்தாள்
இவனென்று
அன்னன்ன சொல்லாப்
பெடையோடும் போய்வரும்"

இதன் பொருள்:- பராங்குச நாயகி தேவாதி தேவனுக்கு அன்னத்தைத் தூதுவிடுகிறாள். ஆனால் அவ்வன்னமோ தூது போகாமல் தன் பெடையுடன் மகிழ்ச்சியாக உலாவித் திரிகிறது. இதனைக் கண்டதும் அன்னத்தை வெறுத்துப் பேசுகிறாள். அன்னங்களின் தன்மை இவ்வளவு தானோ என்று ஏங்கிப் பேசுகிறாள்.

## புள்ளின்வாய்க்கீண்டானை:

கண்ணனின் இளமைப் பருவத்து லீலைகளில், எல்லா ஆழ்வார்களாலும் சிறப்பாகப் போற்றப்படுகின்ற, பாடுப்படுகின்ற ஒரு லீலை பறவை உருவில் வந்த பகாசுரனின் அலகினைப் பிடித்து, கிழித்து, கொன்று எறிந்த லீலையாகும்.

## பெரியாழ்வார் :

பெரியாழ்வார் திருமொழியில்:

"பள்ளத்தில் மேயும் பறவை
யுருக்கொண்டு
கள்ளவசுரன் வருவானைத்
தான் கண்டு
புள்ளிது வென்று பொதுக் கோவாய்
கீண்டிட்ட
பிள்ளையைவந்து குழல் வாராயக்-
காக்காய் பேய்முலையுண்டான்
குழல்வாராயக் காக்காய்"

என்கிறார்.

நீர்த்தாரைகளிலெல்லாம் இரை எடுத்து திரிகின்ற கொக்குப் பறவையின் உருவைக் கண்டு, கள்ள பகாசுரன் கண்ணனைக் கொல்ல வர, இது சாதாரண பறவையல்ல என்று கண்ணன் கண்டு கொண்டான். அந்த யமுனைக் கரையிலே கண்ணபிரானைப் புள்ளுருவில் வந்த பகாசுரன் விழுங்கிவிட, அவன் நெஞ்சிலே கண்ணன் நெருப்புப்போல எரிக்கவே, அவன் பொறுக்கமாட்டாமல், கண்ணனை வெளியே உமிழ்ந்து தன் பலமெல்லாம் திரண்டு மூக்கால் குத்த நினைக்கையில், கண்ணபிரான் அவன் வாய் அலகுகளைத் தனது இருகைகளால் பற்றக் கிழித்திட்டான். இது பாகவதத்தில் போற்றப்படுகின்ற ஒரு அரும் செயல்.

பெரியார் திருமொழியில் இன்னொரு பாசுரத்தில் திருமால் கிருஷ்ண அவதாரத்தில் செய்த லீலைகளைப் புகழ்ந்து பாடும் போது புள்ளின் உருவாய் வந்த அரக்கனையும், யானையின் உருவில் வந்த மற்றொரு அரக்கனையும் அழித்ததைப் பாடுகின்றார்.

"புள்ளினை வாய் பிளந்திட்டாய்!
பொருகரியின் கொம்பொசித்தாய்!
கள்ளவரக்கியை மூக்கொடு
காவலனைத் தலைகொண்டாய்
அள்ளி நீ வெண்ணெய் விழுங்க
வஞ்சாதபடியே னடித்தேன்
தெள்ளிய நீரிலெழுந்த செங்கழுநீர்
சூட்டவராய்"

'கொக்கின் உருவில் வந்த அசுரனைக் கிழித்து எறிந்தவனான நீ எது செய்தாலும் உன்னுடைய வல்லமையைக் கண்டு நான் வெறுமனேயிருக்க வேண்டியதாயிருந்தும், குவலயாபீடத்தின் கொம்பைப் பறித்தவனே, வஞ்சனையையுடைய ராக்ஷஸியாகிய சூர்ப்பனகையின் மூக்கையும் அவளுக்குப் பாதுகாவலாயிருந்த ராவணனுடைய தலையையும் அறுத்தவனே, நீ வெண்ணையை வாரி வாரி விழுங்கியபோது நான் சிறிதும் பயப்படாமல் உன்னை அடித்தேன். அந்தப் பிழையைப் பொறுத்துத் தெள்ளிய நீரில் உண்டான செங்கழுநீர் சூட்டிக் கொள்ள வாராய்.'

## ஆண்டாள் :

ஆண்டாள் தன் நாச்சியார் திருமொழியில் கண்ணன் புள்ளின் வாய் பிளந்த பராக்கிரமத்தைக் கீழ்க்கண்ட பாசுரத்தின் மூலம் சொல்கின்றார்.

"வெள்ளை நுண் மணற்கொண்டு
தெருவணிந்து
வெள்வரைப் பதன்முன்னம்
துறைபடிந்து
முள்ளுமில் லாச்சுள்ளி யெரிமடுத்து
முயன்றுன்னை நோற்கின்றேன்
காமதேவா!
கள்ளவிழ் பூங்கணை தொடுத்துக்
கொண்டு
கடல்வண்ண னென்பதோர்
பேரெழுதி
புள்ளினை வாய்பிளந்
தானென்பதோர்
இலக்கினிற் புகவென்னை யெய்
கிற்றியோ"

ஆண்டாள் தன் திருப்பாவையில், 13-வது பாசுரத்தில்:

"புள்ளின் வாய் கீண்டானைப்
பொல்லா • அரக்கனை!"

என்று தொடங்கும் பாசுரத்தில்,

"பள்ளத்தில் கொக்கு உருக்கொண்டு மேயும் கள்ள அசுரனான பாகாசுரனை வாய் பிளந்து கொன்றவனாம் எம்பெருமான் இராகவனையும், சீதைப் பிராட்டியையும் பிரித்த இரக்கமற்ற கொடியவனும், அரக்கர்களிலே பொல்லா அரக்கன் என்று பெயர் கொண்ட இராவணந்தகனை நந்தவனத்தில் பூச்செடிகளிலே நோய் பற்றிய கிளைகளை மட்டும் எளிதாக கிள்ளி எறிவது போல், கொடியவன் இராவணந்தகனின் ஒவ்வொரு தலையாகக் கொய்த சக்கரவர்த்தி திருமகன் வருவதை பாடிப் பரவசம் ஆகின்ற, சுக்கிரன் உச்சி அடைந்து வியாழன் அஸ்தமிக்கின்ற நேரத்திலே, பறவைகள் எழுந்து இரை தேடப் புறப்பட்டுவிட்டன. மலர் போலும், மான் போலும் கண்களை உடையவனே! குள்ளக்குளிர நீராட வா" என்கின்றாள்.

## திருமழிசையாழ்வார் :

திருமழிசையாழ்வார் தன் திருச்சந்த விருத்தத்தில் கொக்கின் வாய் பிளந்த காதையைச் சொல்லும் பாசுரம்:

"புள்ளதாகி வேதம் நான்கும்
ஓதினாய், அதன்றியும்
புள்ளின்வாய் பிளந்துபுட்
கொடிப் பிடித்த பின்னரும்
புள்ளையூர்த்தி யாதலால் அதென்-
கொல்? மின்கொள் நேமியாய்!
புள்ளின் மெய்ப்பகைக்கடல் கிடத்தல்
காதலித்ததே!

## திருமங்கையாழ்வார் :

திருமங்கையாழ்வார் கோயிலடி என்னும் திருப்பேர் பதியைப் பாடும் பாசுரத்தில்:

"வக்கரன் வாய்முன் கீண்ட
மாயனே! என்று வானோர்
புக்கு அரண் தந்தருள்வாய்!

என்று பாடும்போது கண்ணனின் புள்ளின்வாய் கீண்ட லீலையைக் கண்முன் கொணர்கிறார்.

திருமாலிருஞ்சோலை அழகரைப் பாடும் போது,

"புள்ளினை வாய் பிளந்து
பொருமாகரி கொம்பொசித்து"

என்கின்றார்.

புள்ளுருவாய் கள்ளுருவில் வந்த பூதனைப் பாடாத ஆழ்வார்கள் குறைவு.

திருவேங்கடம் பற்றிப் பாடுகின்ற போது, புள்ளினை வாய் பிளந்த புராணத்தைக் கூறும் போது,

"பொங்கு புள்ளினை வாய்பிளந்த
புராணர் தம்மிடம் பொங்குநீர்"

என்கின்றார்.

திருநறையூர் எம்பெருமானை 7-ம் பத்தில் பாடும் போது,

"புள்வாய் பிளந்த புனிதா"

என்றழைக்கின்றார்.

## நம்மாழ்வார் :

நம்மாழ்வார் பாடுகையில்,

"அம்மானாய்ப் பின்னும் எம்மாண்பு
மானான்
வெம்மாவாய் கீண்ட செம்மா
கண்ணனே"

என்று கண்ணனின் இந்த லீலையைக் குறிப்பிடுகின்றார்.

நம்மாழ்வார் மற்றொரு பாசுரத்தில் கூறுவதாவது:

"மரம் ஏழ் அன்று
எய்தானைப் புள்ளின்வாய்
கீண்டானையே அமரர்
கைதான் தொழாவேகலந்து"

சுக்ரீவனுக்காக சக்கரவர்த்தித் திருமகன் ஏழு மராமரங்களை தொளை இட்டான். கொக்கு உருவில் வந்த பகாசுரனின் வாயைக் கிழித்து வதம் செய்தான் கண்ணன். இருவரும் எம்பெருமானின் அவதாரங்களே ஆயினும், பரம்பொருள் ஒன்று. அமரர் வணங்கும் அவனைத் தொழுது, நற்கதி அடையுங்கள் என்று அறைகூவுகிறார்.

(தொடரும்)



ஸ்ரீநாராயணப்பெருமாள் மணிமாடக்கோயில் - திருநாங்கூர்.
புகைப்படம்: சாயி கிருஷ்ணன்.
அனுப்பியவர்: ஆர். வெங்கடேசன்

இந்து மதத்தின சடங்குக ளும், சம்பிரதாயங்களும் கிரகங் களின் செயல்பாடுகளை அடிப் படையாகக் கொண்டு செய்யப படுகினறன. இந்து மதம் எநத வொரு புததகததையோ, நிறு வனததின கோடபாடுகளையோ முற்றிலும் பின்பற்றி நிறப தில்லை. மாருக, பல நூற்ருண டுகளாக இயற்கைவழி வழிபா டுகளும், சடங்குகளும நடத்தப பட்டு வருகின்றன.

இநத முறையில மிகச்சிறந்த எடுத்துககாட்டாக வைகுண்ட ஏகாதசியைக் கூறலாம். கிறிஸ்து பிறப்பதற்கு நானூறு ஆண்டுகளுக்கு முன்பே, அதா வது இன்றைக்கு 2400 ஆண டுகளுககு முனபே வைணவத் தோடு தொடரபு கொணடு வைகுண்ட ஏகாதசியும் இருந்து வருகிறது.

பிராமணர்களைக கொன்ற பாவம அவனது தலையாக மாறி இருநதது. குருவை இழிததும பழிததும பேசிய இழிகுணம அவனது தொடை களாகவும், உயிர உறுப்பாகவும் மாறி இருநதன. நமபிய வரை மோசம் செயத இழிசெய லும அவனது உடலில இடம் பெறறு இருந்தது. மகா விஷ்ணு இந்த பாவியை ஏகா தசியன்று அழிதது ஒழித்தார.

மகாவிஷ்ணு ஆயிரககணக் கான பாவிகளை ஒருமுறை சிறைவைத்தார். தமது தவ றுகளை எண்ணி அவர்கள் கண்ணீர் விட்டார்கள். தமது தவற்றைத திருத்திக் கொள்ள ஒரு வாய்பபு அளிப்பது போல மகாவிஷ்ணு, ஏகாதசியை உண் டாககினார. அனறு அரிசியால் செய்த உணவுப் பொருளகளைச் சாப்பிடாமல், அவரகள தாம் செய்த கெடட செயலகளுக்குக் கழுவாய தேடினாரகள. ஏகா தசியனறு அரிசியால் செய்யப பட்ட உணவுப் பொருளகளைச சாப்பிடுவது மிகபபெரிய பாவ மாகக் கருதபபடடது.

மறறொரு கதை இபபடிச சொல்கிறது. அழகில் சிறந்த மோகினி எனற பெண, ருக மாஙகதன என்ற அரசனை அணுகினாள். வைகுணட ஏகா தசி நாளன்று உணவு சாபபி டுமாறு அவரை மோகினி வறபுறுத்தினாள. தனனை அநதப பெணணிடததிலிருநது தன்னைக காபபாற்றுமாறு ருக மாஙகதன, இறைவனை வேண டினான். இறைவன, பகத னின வேண்டுகோளுக்கு இணங் கினான். அவனை வைகுண்டத் திற்கு அழைத்துச் சென்ருன். இந்த நிகழ்ச்சி, தமிழ்நாட்டில் ஏகாதசி விரதம் இருப்பதற்குத் தொடக்கம் ஆயிற்று.

மற்றொரு நிகழ்ச்சியும் சிறப்பா கச சொல்லப்படுகிறது. பொற் காலமாகக் கருதப்படும் கிருத யுகத்தில் அது நிகழ்ந்தது.

சந்திராவதி என்ற நகரில் முனேரு என்ற ஒரு அரககன வாழ்ந்து வநதான். அவன் மக் களை மட்டுமல்லாமல், நாரா யணனை வணங்குகினற கட வுளரைக கூடத் தொல்லைப்ப டுததி வந்தான். மகாவிஷ்ணு அவனை, ஏகாதசி நாளன்று அழித்து ஒழித்தார். அனறு முதல, அந்தநாள் வைகுண்ட ஏகாதசி என்று பெருமையோடு அழைககபபடுகிறது.

# ஏகாதசியின் பெருமை

சேலம் சக்திக்கொடி

அமாவாசையைத் தொடரந்த பதினோராவது நாள, மகா விஷ்ணுவை வழிபடும் பக்தர் கள் விரதம் இருககும நாளாக இருநது வருகிறது. அனறு கஞ்சி போன்ற திரவ உண வுகளும, பழஙகள், இனிபபுகள, பால போன்றவை மட்டும் சாப் பிடபபடுகின்றன. பலர, ஒன றும சாபபிடாமல முழுவதுமாய் பட்டினி இருக்கவும் செய்கிறா கள்.

புராணக்கதை ஒன்று இப்ப டிச சொல்லப்படுகிறது. மகா விஷ்ணு உலகைப் படைததார. ஒரு பாவியையும படைத்தார. அவன் பனிபோல வெளளை உடலும, கறுப்பாக அசிங்க மான முகமும கொணடு இருந தான. கெட்டது செயபவரக ளுக்கு அவன் ஒரு பயமுறுதத லாக இருநதான

இன்னொரு நிகழ்ச்சியும் ஏகா தசியின் ஏற்றத்தைப் புலப்படுத் துகிறது.

ஒருமுறை மகாவிஷ்ணு அரக் கர்களோடு போர் புரிந்தார். கடு மையாகப் போர் நடந்து கொண்டு இருந்தபோது அவ ரது உடல் காயமடைந்தது. அதிலிருந்து அழகான தேவதை ஒருத்தி தோன்றினாள். அவள் ஏகாதசி என்று அழைக்கப் பட்டாள். மூன்று கோடி ரிஷி முனிவர்களும், கடவுளரும் இந்த அரிய காட்சியைக் கண்டனர். அன்று முதல் இது முக்கோடி ஏகாதசி என்றும் அழைக்கப்படு கிறது.

தமிழகத்தில் ஸ்ரீரங்கத்திலும், கர்நாடக மாநிலத்தில் சிருங்கே ரியிலும் ஏகாதசி மிகவும் சிறப் பாக வழிபடப்படுகிறது. ❄

# ஸ்ரீவேங்கடேச ஸுப்ரபாதம்

ஸ்ரீமான் உ.வே. திருமலை
அநந்தாண்பிள்ளை க்ருஷ்ணமாசாரியர் - திருப்பதி.

ஸ்ரீப்ரதிவாதி பயங்கரம அண்ணா அருளிய ஸ்ரீவேங்கடேச ஸுப்ரபாதம முதலிய நான்கு ஸ்தோத்ரங்களும், ஸ்ரீமான் உ.வே. வித்வான் குன்றபாக்கம திருமலை அநந்தாண்பிள்ளை க்ருஷ்ணமாசாரியர (திருபபதி) ஸ்வாமியினுடைய உரையும.

## தனியன்கள் :

வேதாந்த தேசிககடாக்ஷ
விவ்ருத்த போதம்
காந்தோபயந்த்ருயமிந:
கருணைகபாத்ரம்
வத்ஸாந்வவாயம் அநவத்ய-
குணைருபேதம்
பக்த்யா பஜாமி பரவாதி
பயங்கரார்யம்

வேதாந்த தேசிகருடைய கடாக்ஷத்தினால் வளர்ந்த அறிவு உடையவரும் அழகிய மணவாள மாமுனிகளுடைய கருணைக்கு ஒரே கொள்கலமான வரும் ஸ்ரீவத்ஸகோத்திரத்தில் உதித்தவரும் குற்றமற்ற குணங்களுடன் கூடியவருமான ப்ரதிவாதிபயங்கராசார்யரை அடியேன் ஸேவிக்கிறேன்.

இதுதன்னில் முதற்பாதம் மாமுனிகளும்
இரண்டாம் பாதம் அண்ணாவும் பின்னிரண்டு பாதங்கள் அண்ணாவின் சிஷ்யர்களும் அருளிச் செய்தவை என்று ஸ்ரீவாதிபீகரவைபவ நூல் கூறும்.

ஸ்ரீரம்யஜாமாத்ரு முநீந்த்ர
சாஸநாத்,
யோ மங்களாசாஸத்
ஸௌப்ரபாதிகே
சக்ரே ப்ரபத்திஞ்ச
வ்ருஷாசலேசிது:
தம் வாதிபீக்ருத்குருமாச்ர-
யாம்யஹம்

யாவரொருவர் அழகிய மணவாள மாமுனிகளின் திருவாணை காரணமாக, திருவேங்கடமுடையான விஷயமாக மங்களாசாஸனம் ஸுப்ரபாதம் ப்ரபத்தி (ச= ஸ்தோதரம்) என்னுமிவற்றை இயற்றியருளினாரோ, அந்த ப்ரதிவாதிபயங்கராசார்யரை அடியேன் தஞ்சமடைகிறேன்.

இதன் கர்த்தா இன்னாரென்று அறிய இயலவில்லை. யாரோ ஒரு சிஷ்யராக இருக்க அடுக்கும்.

## ஸ்ரீரஸ்து
## ஸ்ரீவேங்கடேச ஸுப்ரபாதம்

திருவனந்தாழ்வானுடைய திருவவதாரமான யதிராஜரின் புநரவதாரபூதராய் விசதவாக்சிகாமணிகளான ஸ்ரீமணவாள மாமுனிகளுடைய அஷ்டதிக்கஜாசார்யர்களென்று ப்ரஸித்தி பெற்ற சிஷ்யர்கள் எண்மரில் ஒருவரான ப்ரதிவாதி பயங்கரம் அண்ணாவென்னும் மஹாசார்யர் அம்மாமுனிகளுடன் திருமலைக்கு எழுநதருளியபோது அவர் தமது ஆசாரியரின் நியமனத்தால் திருவேங்கடமுடையான் விஷயமாக ஸுப்ரபாதம், ஸ்தோத்ரம், ப்ரபத்தி, மங்களாசாஸனம் என்னும் நான்கு துதிநூல்களையும் திருவேஙகடமுடையானெதிரில் விடியற்காலையில் விணணப்பியாநின்று கொண்டு தொன்றுதொட்டு வரும ஸம்ப்ரதாயப்படியே முதன்முதலில் கௌஸல்யா ஸுப்ரஜாராம என்று இதிஹாஸச்ரேஷ்டமான ராமாயண சலோகத்தையும் 'உததிஷ்டோத் திஷ்ட' என்றொரு புராண (?) சலோகத்தையும அநுஸந்திக்கிறார். இநத நான்கு ஸதோத்ரங்களும திருமலையில அந்நாள் தொடங்கி இந்நாள் வரை, நாடோறும் ஸுப்ரபாத காலத்தில் நியமேன அநுஸந்திக்கப் பட்டுவருகின்றன.

கௌஸல்யாஸுப்ரஜா ராம பூர்வா
ஸந்த்யா ப்ரவர்த்ததே,
உத்திஷ்ட நரசார்த்தூல
கர்த்தவ்யம் தைவமாஹ்நிகம்

பதவுரை: கௌஸல்யா ஸுப்ரஜ: = கௌஸல்யையின் நல்லபிள்ளையே, நர சார்த்தூல = மனிதரில் சிறந்தவனே, ராம = இராபிரானே, பூரவா

இநநூலைக் கொடுததுதவிய காஞ்சிபுரம 'பிரதிவாதி பயஙகரம அண்ணா கைஙகர்ய சபை'யினரகளு எஙகள நனறி.

--ஆசிரியர்.

ஸந்த்யா = முற்சந்திவேளை, ப்ர வர்த்ததே = ஆரம்பமாகிறது. தைவம் ஆஹ்நிகம் = தேவதை களைக் குறித்துச் செய்யவேண் டிய பகற்கால அனுஷ்டானம், கர்த்தவ்யம்= செய்யப்படவேண் டும். உத்திஷ்ட=எழுந்திராய்.

கருத்து: கோசலையின் நன் மகனே புருஷோத்தமா ஸ்ரீராமா, பொழுது விடிந்தது. காலைக் கடன்களைச் செய்யவேண்டும். திருக்கண்விழித்து எழுந்திரு. (இது விச்வாமித்ரர் இராமபி ரானை எழுப்புவதாக, வால்மீக முனிவர் பணித்த இராமாயணச் செய்யுள்.)

**உத்திஷ்டோத்திஷ்ட கோவிந்த**
**உத்திஷ்ட கருடத்வஜ**
**உத்திஷ்ட கமலாகாந்த**
**த்ரைலோக்யம் மங்களம் குரு**

(ப) கோவிந்த=பசுமேய்க்கும் கண்ணபிரானே, உத்திஷ்ட உத் திஷ்ட=விரைவில் எழுந்திரு. கருடத்வஜ=கருடனைக் கொடி யில் உடையவனே, உத்திஷ்ட= எழுந்திரு, கமலா காந்த= திரு மகளின் காதலனே, உத்திஷ்ட= எழுந்திரு, த்ரைலோக்யம்= மூவு லகங்களையும், மங்களம் குரு= மங்களமுடையதாகச் செய்.

(க) மஹாலக்ஷ்மியின் மண வாளனே! கருடக்கொடியுடைய வனே! கண்ணா! மூவுலகங்க ளையும் உன் கடாக்ஷத்தினால் புனிதமாக்க நீ விரைவில் எழுந் திரு. (இது ஒரு புராணச்செய் யுளாக இருக்கத்தகும். ஆகரம் கண்டுகொள்க).

## விளக்கவுரை

கௌஸல்யா ஸுப்ரஜா ராம என்பதை கௌஸல்யா ஸுப் ரஜ:- ராம என்று இரண்டா கப் பிரித்தால் கோசலை யின் நன்மகனே இராமனே என்றும், கௌஸல்யா - ஸுப் ரஜா: ராம என்று மூன்ரு கப் பிரித்தால் ஸுப்ரஜா: என் பது கோசலைக்கு விசேஷண மாய் இராமபிரானே (உன் தாயாகிய) கோசலை நல்ல பிள்ளையைப் பெற்றவளாகிருள் என்றும் பொருள் அறியப்படும். இவ்விருவகையிலும் இராமா! இவ்வளவு அழகிய உன்னை மகனாகப் பெற்ற கோசலை யின் பாக்கியந்தான் என்னே என்று அவளைக்கொண்டாடுவ தில் நோக்கமாகும். விச்வாமித் திரமுனிவர் இராமபிரானையும் இளையபெருமாளையும் எழுப்பி அவர்கள் வாயிலாக நிறை வேற்ற நினைத்த தமது யாக காரியத்தை மறந்து இராமனாம் சேயைப் பெற்ற தாயைத் துதிக்கலானார். ‘உண்ணப் புக்கு வாயை மறப்பாரைப் போலே (முனிவன்) வந்த காரி யத்தை மறந்தான். ஒரு திரு வாட்டி பிள்ளை பெறும்படியே! என்கிருன்’ என்பர் திருப்பாவை (2) வியாக்கியானத்தில் (பரமன்) என்றதை விவரியா நின்ற அழ கிய மணவாளப்பெருமாள் நாய னார்.

ராம பதத்திற்கு - தன் வடி வழகு வள்ளல்தன்மை மற்று முள்ள நற்குணங்கள் திருவிளை யாடல் ஆகியவற்ருல் அனைவ ரையும் மகிழ்விப்பவன் என்று பொருள். இவ்வொரு திருநா மமே ஆயிரநாமங்களோடு ஸமா னமான பெருமையைப் பெற்ற தாகும். ‘ஸ்ரீராம ராம ராமேதி ரமே ராமே மநோரமே । ஸஹஸ் ரநாமதத்துல்யம் ராம நாம வராநநே ।।’ என் மனத் துக்கினிய பெண்ணே (நான்) ஸ்ரீராம ராம ராம என்று சொல்லி மகிழ்கிறேன். ஏனெ னில் அது ஆயிரந்திருநாமங்க ளோடு துல்யமானது என்று பார்வதியினிடம் சிவபெருமான் கூறியது கொண்டு இப்பெய ரின் பெருமை அறியலா கும். இத்திருநாமம் தசரதத நயனான இராகவனுக்கு மட்டு மல்லாமல் அவன் யாருடைய அவதாரமோ அந்த பரப்ரஹ்மத் துக்கும் உண்டென்று அகஸ்த்ய ஸம்ஹிதா வசனமொன்றை அத் தாட்சியாகக் காட்டுகிருர் இரா மாயணப் பேருரையாசிரிய ராகிய ஸ்ரீகோவிந்த ராஜர். ‘ரமந்தே யோகிநோऽநந்தே ஸத் யானந்தே சிதா மநி இதி ராம பதேநாஸௌ பரம் ப்ரஹ்மாபி தீயதே ।।’ ( யோகிகள் - எல்லா விடங்களிலும் எல்லாக்காலங்க ளிலும் எல்லாப் பொருள்களா கவும் உள்ளதனால் அளவுப டாதவனும் மாறுதல் இல்லாத வனும் ஆனந்த ரூபனும் அறி வுருவினனுமாகிய பரமாத்மாவி னிடத்தில் ரமிக்கிருர்கள்=மனத் தைச் செலுத்தி மகிழ்கின்ருர் கள் என்ற காரணத்தால் இப் பரமாத்மாவாகிய பரப்ரஹ்மமா னது ராம என்னும் சொல் லால் கூறப்படுகிறது) என்பதே அவ் வசனமாகும். இதனால் பரப்ரஹ்மவாசகமாகிய ராமநா மம் அதன் அவதாரமான தாச ரதியையும் குறிக்கின்றதென்று காட்டியபடி.

பூர்வஸந்த்யை என்பது காலைப்போது. இதனால் உத்தர ஸந்த்யை யாவது மாலைப்போதென்பதும் மத்ய ஸந்த்யையாவது நடுப்பகலென் பதும் பெறப்படும்.

உத்திஷ்ட நரசார்த்தூல ஆண்களில் உயர்ந்தவர்கள், விழித்துக்கொண்டு ஊக்கத்து டன் செய்யவேண்டிய வேலை யிருக்கத் தூக்கத்துக்கு இடம் தரலாமோ என்றும், இதுவரை யில் துயிலுமழகைக் கண்

டேன், இனித் துயிலெழுமழகைக் காணவேணும் எழுந்திராய் என்றும் இதற்குக் கருத்துக்கூறுவர்.

தைவம் ஆஹ்நிகம் கர்த்தவ்யம் - எழுந்திருந்தால் ஆகும் பயன் இதனால் கூறப்படுகிறது. தேவனான பரமாத்மாவினால் வேதாதிகளில் விதிக்கப்பட்ட நித்யகருமம் நீ செய்யவேண்டும் எழுந்திரு என்றும், தேவனால் = தேவரீரால் அவற்றில் விதிக்கப்பட்ட நித்ய கருமம் நான் செய்யவேண்டும் அதை ஏற்றுக்கொள்ளத் தேவரீர் எழுந்திரீர் என்றும் இரண்டு கருத்துக்கள் பணிப்பர்.

(2) உத்திஷ்ட உத்திஷ்ட என்ற அடுக்கு விரைவைக் குறிக்கும். 'கோவிந்தோ வாஸுதேவே ஸ்யாத் கவாத்யக்ஷே' என்ற நிகண்டுவின்படி கோவிந்த சப்தம் வாஸுதேவனையும் இடையனையும் குறிப்பிடும். வாஸுதேவ பதம் வாஸுசாஸௌ: தேவ:ச வாஸுதேவ: என்றும் வஸுதேவஸ்ய புத்ர: வாஸுதேவ: என்றும் இரண்டு வ்யுத்பத்திகளைக் கொண்டது. முதலது தன்னுள் அனைத்துலகும் நிற்கத் தானும் அவற்றுள் நிற்கும் பிரானாய் அவற்றின் குற்றமேதும் தட்டாதவனான நாராயணனையும், இரண்டாவது கண்ணனையும் காட்டும். ஆக கோவிந்தபதம் முதலில் நாராயணனாய் நடுவில் வஸுதேவர் மகனாய்க் கடைசியில் ஆயர்பாடிக்கு வந்து இடையனாய் நின்ற பெருமானைக் கூறிற்றென்று கொள்க. இனி கோ சப்தத்திற்கு பூமி வாக்கு சூரியன் முதலான பொருள்கள் உள்ளமைக்குச் சேர, வராகாவதாரமெடுத்துப் பூமியை அடைந்தவனே என்றும், வாமநனாய்ப் பூமியை நீரேற்றுப் பெற்றவனே என்றும், ஹம்ஸரூபந்தரித்து சப்தராசியைப்பிரித்தெடுத்தவனே என்றும், ஹயக்ரீவனாய்த் தோன்றி அவ்வேதவாக்கைப் பிரகாசிப்பித்தவனே என்றும், சூரிய மண்டலத்தை அடைந்தவனே என்றும் கோவிந்த சப்தத்தின் பொருள்களைப் பலவாறு கூறுவாரும் உளர். முன் ச்லோகத்தில் இராமபிரானைத் துயிலுணர்த்தினமையால் இதனில் அவனிலும் பிற்பட்ட கண்ணபிரானை எழும்பிற்குக் கொள்ளல் பொருந்தும்.

ஆழ்வார்கள் திருவேங்கடவனைக் கண்ணனாக வருணித்துள்ளது முப்பத்திரண்டிடங்களுக்கு மேலாகும். இராமனாகப் பணித்தது ஆறேழிடங்களில் மட்டுந்தான். அவதார க்ரமத்தைப் பின்பற்றுவதைவிட ஆசார்யர்களுக்கு ஆழ்வார்களைப் பின்செல்லுவது முக்கியமாகையால் கோவிந்தனை முன்னமெழுப்பி இராமனை அதற்குப் பின்பு எழுப்புதலே முறைமை என்று தோன்றக்கூடும். ஆயினும் இங்கு ஏதோவொரு புராண ச்லோகமாகக் கருதப்படுகின்ற 'உத்திஷ்டோத்திஷ்ட' என்ற ச்லோகத்தைவிட இதிஹாஸ ச்ரேஷ்டமான ஸ்ரீராமாயணத்திலுள்ள கௌஸல்யா ச்லோகம் உயர்ந்ததாகையால் ச்லோக கௌரவத்தில் மட்டும் மனம் செலுத்தி உயர்ந்த ச்லோகத்தைச் சொல்லி இராமபிரானை முதலில் எழுப்பினாரென்று கருதுக.

மேலும் வராகபுராணம் முற்பகுதி நாற்பத்தொன்பதாம் அத்தியாயத்தில் - இந்திரன் முதலிய தேவர்கள் நான்முகக் கடவுளை முன்னிட்டுத் திருவேங்கடவனைத் துதிக்க, ஸ்ரீநிவாஸப் பெருமாள் 'நீங்கள் இனிச் சிறிதும் சிந்தையில்லாமல் இருங்கள். சீக்கிரமே இராவணனை உற்றுருறவினரோடு கூட நான் வதம் செய்துவிடுகிறேன். இது ஸத்யம்' என்று கூறியதாக உள்ளதனால் திருவேங்கடமுடையானும் இராம பிரானும் ஒருவரேயென்பது மிக மிக ஸ்பஷ்டமாக அறியப்படுவதனாலும், இதையொட்டி நோக்கினால் வால்மீகி முனிவர் தமது ராமாயணத்தில் (பால 2-15) வேடனுக்குச் சாபம் கொடுப்பதாகவும் இராமபிரானுக்கு மங்களாசாசனம் செய்வதாகவும் அமைத்த 'மாநிஷாத' ச்லோகத்தில், மாநிஷாத மா நிஷ்ததி அஸ்மிந் என்ற வ்யுத்பத்தி மூலமாக இராமபிரானை, ஸ்ரீநிவாஸா - அலர்மேல்மங்கையுறைமார்பா என்று ஸம்போதித்து, 'மந்தோதரி ராவணன் என்ற அரக்கரிரட்டையை அடைந்து அதில் காமத்தினால் மோஹித்த ஆணாகிய ஒன்றைக் கொன்று உலகைக் காத்ததனால் நீ பல்லாண்டு பல்லாண்டு நிலையாக வாழக்கடவாய் என்று வாழ்த்தும் போது இராமபிரானையும் திருவேங்கடமுடையானையும் ஒருவராகக் கருதியிருக்கக்கூடுமென்று தோன்றுவதனாலும், அத்தகைய வால்மீகியின் 'கௌஸல்யா' என்னும் ச்லோகத்தில் கௌரவம் தோற்ற ப்ரதிவாதி பயங்கரம் அண்ணா கண்ணனை எழுப்பும் ச்லோகத்துக்கு முன்பாக இராமனை எழுப்பும் ச்லோகத்தை அனுஸந்தித்தார் என்று கருதுவதிலும் குறையேதுமில்லை.

உத்திஷ்ட கருடத்வஜ = த்வஜ: சிஹ்நே பதாகாயாம் என்ற ஹைமநிகண்டுவின்

படி கருடனை அடையாளமாகக் கொண்டவர் என்றும், கருடனைத் தன்கொடியில் உடையவர் என்றும் இருபொருள் பெறும் கருடத்வஜ: என்பது. கருட என்னும் சொல் கருதபி: டயதே - சிறகுகளால் ஆகாயத்தில் பறக்கிறன் என்றும், ஸர்ப்பாந் கிரதி - பாம்புகளை விழுங்குகிறன் என்றும் இரு பொருள் தந்து புள்ளரசனுக்குக் காரணப் பெயராகும்.

கமலாகாந்த-காந்தி: என்னும் சொல் கமு-காந்தெள, கநதீப்தெள என்று இரண்டு தாதுக்களடியாகப் பிறந்து முறையே ஆசை, ஒளி என்று பொருள்படும். எனவே கமலாயா: காநத என்பது பிராட்டி விஷயமான அன்புடையவன் என்றும், கமலயா காந்த: என்பது பிராட்டியினால் ஒளி பெற்றவன் என்றும் பொருள்களைத் தரும்.

முதலது பிராட்டியிடம் அன்பில்லாத வெறுங்கணவனன்று, அன்பு கொண்ட கணவனென்னும் பொருள்பட்டு 'உனக்கேற்கும் கோல மலர்ப்பாவைக்கு அன்பா' என்ற ஆழ்வார் ஸ்ரீஸூக்தியை நினைவூட்டும். இரண்டாமதனில ஒளியாவது உடலொளி ஆன்மவொளி யென்று இருவகைப்படும். முதலது தன மேனியிலுள்ள நீலவொளியொடு பிராட்டியினால் பொன்னொளியும் கலக்கப்பெற்றவன் என்று பொருள்பட்டு 'நின்றுடு கணமயில் போல் நிறமுடைய நெடுமால' என்னும் ஸ்ரீஸூக்தியை நினைவூட்டி மயிற கழுத்து நிறமுடையவன் என்ற கருத்தைப் புலப்படுத்தும். பின்னதான ஆன்மவொளியாவது தேஜஸ்ஸு எனப்படும் பகைவரை அடக்கும் ஆற்றல். அது இவனுக்குப் பிராட்டியின் ஸம்பந்தத்தால் உண்டாகின்றது. 'அப்ரமேயம் ஹி தத்தேஜ: யஸ்ய ஸா ஜநகாத்மஜா' (ராமாஆரண்38-18 ) பிரசித்தி பெற்ற ஜானகி எவனுக்கு உரியவளோ அந்த இராமனுடைய தேஜஸ் ஸானது ஒருவராலும் அளவிடற்பாலதன்று - என்று பிராட்டியின் சேர்க்கையால் பகைவரை அடக்கும் ஆற்றல் படைத்தவன் பெருமான் என்று கூறப்படுகின்றமை காணத்தக்கது.

(தொடரும்)


திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி.

## ஸ்ரீபத்மாவதி தாயார் திருக்கோயில் திருச்சானூர்.



**ஸ்ரீபத்மாவதி கல்யாணோத்ஸவம் (பரிணயம்)**
நாளும் காலை 10-30 முதல் 12-00 வரை.

* ரூ. 500/- செலுத்தி இவ் ஆர்ஜித சேவையில் பங்கேற்கலாம். கிருஹஸ்தரைச் சார்ந்த 5 நபர்களுக்குச் சிறப்பு நுழைவு தரிசன வசதியும், வஸ்த்ர பஹுமானமும் அளிக்கப்படும்.
* இச்சேவைக்கான கட்டணத்தை நேரடியாக பெயிஷ்காரக்குச் செலுத்தலாம். அல்லது நாட்டுடைமையாக்கப்பட்ட எந்த வங்கி மூலமாவது "செயலாட்சித் தலைவர், (Executive Officer) தி.தி. தேவஸ்தானம், திருப்பதி" எனும் முகவரிக்கு எடுக்கப்பட்ட காசோலை மூலமாகவும் அனுப்பலாம்.
* ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கை அளவுவரை மட்டுமே கிருஹஸ்தர்களுக்கு தங்குவசதி செய்து தரப்படும்.

இவ் ஆர்ஜித சேவையில் பங்கேற்கும் பக்தர்களுக்கு இவ் அரிய கோயில்நிகழ்ச்சி கண்களுக்கும், கருத்துக்கும் பெருவிருந்தாக அமையும். மற்றும் தாயாரின் திருவருள் கிடைத்திடவும் செய்யும்.

## லட்டு படி சேவா திட்டம்

| வரிசை எண். | சேவையின் பெயர் | தரிசன அனுமதி | கட்டணம் | பிரஸாதம் |
|---|---|---|---|---|
| (1) | ஆர்ஜித லட்டு படி | 5 | ரூ. 2500 | 30 பெரிய லட்டுகள் |
| (2) | ப்ரோக்தம் (சிறிய) லட்டு படி | 5 | ரூ. 750 | 30 சிறிய லட்டுகள் |
| (3) | மாதிரி (மினி) லட்டு படி | 2 | ரூ. 250 | 10 லட்டுகள் |

"ஸூர்யேந்து பௌம புத வாக்பதி
காவ்ய ஸௌரி
ஸ்வர்பாநு கேது திவிஷத்
பரிஷத்ப்ரதாநா: ।
த்வத்தாஸ தாஸ சரமாவதி
தாஸ தாஸா: ।
ஸ்ரீவேங்கடாசலபதே தவ
ஸுப்ரபாதம்" ।।
-ஸ்ரீவேங்கடேஸ ஸுப்ரபாதம்:
ஸ்லோகம் 19



# கோளும் நாளும்

டாக்டர் கே. சுப்ரமணியன் - சென்னை.

நவக்கிரகங்கள் இந்திராதி தேவர்களையும் ஆட்டி வைக்கும் சக்தி வாயந்தவை. ஆனால் திருமலையில் கோயில கொண்டிருக்கும் எம்பெருமானை சரணடைந்தவர்களுக்கு, நவக்கிரகங்கள் யாதொரு கெடுதியும் செய்யாமல் சகல நன்மைகளையும் செய்கின்றன எனபது உறுதி. அடியவர்களைக் கோள்களின பிடியிலிருந்து காப்பாற்றி ஆண்டவன் அருள் பாலிக்கிறன் என்பது உறுதி.

பாண்டிநாடு சைவ நெறியினின்றும் நீங்கிச் சமணரால் இடர்ப்படுவதால், அவ்விடரை நீக்குமாறு கூன் பாண்டியனின் மனைவி மங்கையர்க்கரசியாரும் அமைச்சர் குலச்சிறையாரும், திருஞான சம்பந்தருக்குச் செய்தி அனுப்பியிருந்தார்கள். உடன பாண்டிநாடு செலல சம்பந்தர் தீர்மானித்தார்: அவ்வமயம திருநாவுக்கரசர் "சமணர்கள் வஞ்சனை மிக்கவர்கள். கோளும் நாளும் தீயனவாக நிற்கின்றன. ஆதலால் நீர் அங்கு போக நான் சம்மதியேன்" என்றார்.

அப்பொழுது சம்பந்தர் "அப்பரே, அரனார் அடிமலர் போற்றும் அடியவர்க்குப பழுது நேராது. கோளும், நாளும் நலமே செய்யும்" என்று கூறி "கோளறு பதிகம்" பாடினார்.

"வேயுறு தோளி பங்கன விடமுண்ட
கண்டன்
மிக நல்ல வீணை தடவி
மாசறு திங்கள் கங்கை
முடிமேலணிந்தென்
உளமே புகுந்த அதனால்
ஞாயிறு திங்கள் செவ்வாய் புதன்
வியாழன்
வெள்ளி சனி பாம்பிரண்டுமுடனே
ஆசறு நல்ல நல்ல அவை
நலல நல்ல
அடியிவர்க்கு மிகவே

எனத் தொடங்கி 11 திருபபதிக களை பாடினார. சமணரகளை வாதில வெ ..றார.

ஒரு சமயம் நந்திதேவர் பார்வதி தேவியிடம் நவக்கிரங்களைப் பற்றி விளக்கமாகக் கூறுமாறு வேண்டினார். தேவியும் கிரகங்கள் எத்தனை, அவற்றிற்கான உலோகம், நவரத்தினம், தோற்றுவித்த தேவர்கள், பலன், கெடுதல், எவ்வாறு அவற்றை நீக்கிக் கொள்ளலாம் என்று பல விதமான செய்திகளைக் கூறினர் என்பர்.

நவக்கிரகங்கள் சூரியன், சந்திரன், அங்காரகன், புதன், குரு, சுக்கிரன், சனி, ராகு மற்றும் கேது என்று ஒன்பதாகும். ஆதியில் சூரியன் முதல் சனி வரை ஏழு கிரகங்கள்தான் இருந்ததாகவும், ராகு, கேது . இரண்டும் பின்பு சேர்க்கப்பட்டு ஒன்பனதாகவும் கூறுவர். ராகு, கேதுக்களை சாயா கிரகங்கள் என்றும் கூறுவர்.

வானநூல் ஆராய்ச்சியின் படி சூரியன் ஒரு விண்மீன் அல்லது நட்சத்திரம். அதற்கு சுய ஒளி உண்டு. சந்திரன் ஒரு துணைக்கோள். செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி சனி யாவும் கிரகங்கள்.

ராகு, கேதுக்களை நோட்ஸ் (Nodes) என்பர். யுரேனஸ் புளூட்டோ, நெப்டியூன் முதலியவை தற்காலத்தில் கண்டு பிடிக்கப்பட்டவை.

நவக்கிரகங்களுக்கு அதிதேவதை (எஜமானர்), பிரத்யதி தேவதை (எஜமானருக்கு எஜமானர்) என்று உண்டு.

| நவக்கிரகம் | அதிதேவதை | பிரத்யதி தேவதை |
|---|---|---|
| சூரியன் | அக்னி | ருத்ரன் |
| சந்திரன் | கௌரீ | பார்வதி |
| அங்காரகன் | குகன் | சுப்ரமணியன் |
| புதன் | நாராயணன் | விஷ்ணு |
| குரு | பிரம்மா | தக்ஷிணா மூர்த்தி |
| சுக்கிரன் | இந்திரன் | துர்க்கா |
| சனி | பிரஜாபதி | துர்க்கா |
| ராகு | ஸர்ப்பம் | துர்க்கா |
| கேது | பிரம்மா | கணபதி |

நவக்கிரகங்களைப் பற்றிய வேறு பல செய்திகளைச் சோதிட நூல்கள் விளக்கமாகக் கூறுகின்றன. அவர்களுக்கு உகந்த புஷ்பம், தானம், சுவை, உலோகம் முதலிய பல விஷயங்கள் அவற்றில் கூறப்படுகின்றன.

எல்லா சிவாலயங்களிலும் நவக்கிரகங்களுக்குத் தனிச் சந்நிதி இருக்கும். ஆனால் திருக்கடவூர் அமிர்த கடேசுவரர் கோவிலில் நவக்கிரகங்கள் இல்லை. ஏனெனில் காலனைச் சம்ஹாரம் செய்த இடம். விஷ்ணு கோவில்களில் இச்சந்நிதி இருப்பதில்லை. ஆனால் மதுரை கூடலழகர் கோவிலின் இரண்டாம் பிரகாரத்தில் நவக்கிரக பிரதிஷ்டை செய்யப்பட்டுள்ளது.

வழக்கமாக சூரியன் நடுவிலும் கிழக்கு நோக்கியும், மற்ற கிரகங்கள் சூரியனைச் சுற்றியும் இருக்கும். வரிசைக்கு மூன்றாக மூன்று வரிசையாக இருக்கும். ஆனால் கீழே குறிப்பிட்டுள்ள சில தலங்களில் நவக்கிரகங்கள் வேறுவிதமாக அமைக்கப்பட்டு வழிபாடுகள் நடைபெற்று வருகின்றன.

தஞ்சாவூர் மாவட்டம் சூரியனார் கோவிலில், சூரியனைச் சுற்றி மற்ற கிரகங்கள் அமைந்துள்ளன. ஒவ்வொரு கிரகத்திற்கும் ஒவ்வொரு தனிச்சந்நிதி உள்ளது.

தஞ்சாவூர் பெரிய கோவில் என்றழைக்கப்படும் பிரகதீசுவரர் கோவிலில் பிரகாரத்தில் லிங்க வடிவில் மூன்று வரிசையில் 9 லிங்கங்கள் நவக்கிரகங்களாக வழிபடப்படுகின்றன.

இதே போல் கேரளாவிலும் லிங்கங்கள் நவக்கிரகங்களாக அமைக்கப்பட்டுள்ளன.

புதுக்கோட்டை மாவட்டம் திருப்பெருந்துறை என அழைக்கப்படும் ஆவுடையார் கோவிலில் நவக்கிரகங்கள் தூணில் உள்ளனர்.

திருப்புகலூரில் 'ட' வடிவத்தில் உள்ளனர்.

திருக்கோளிலி, வேதாரண்யம், திருவாய்மூர், திருவாரூர் ஆகிய இடங்களில் ஒரே திசை நோக்கி வரிசையாக உள்ளனர்.

நாகூர் நாகநாத சுவாமி கோவிலில் ஒரே வரிசையில் உள்ளனர். ஆதியில் ஒரே வரிசையில் இருந்ததாகவும் பிறகு கும்பாபிஷேகம் செய்யும் பொழுது வழக்கம்போல் மூன்று வரிசையாக வைத்ததாகவும் சொல்வர். ஆனால் மாற்றி அமைத்த பிறகு கோவிலில் வழிபாடு சரிவர நடைபெறாததால் 1990ல் நடந்த குடமுழுக்கின் போது மறுபடியும் ஒரே வரிசையில் அமைத்த பிறகு கோவிலுக்கு அதிக பக்தர்கள் வருவதாகவும் பூசைகள் சரியாக நடைபெறுவதாகவும் அன்பர் ஒருவர் கூறினார். இது ஒரு ஆதிவிடங்கத்தலமாகும்.

மன்னார்குடி சிவன்கோவிலில் எல்லாமே சூரியனை நோக்கிய வண்ணம் உள்ளனர்.

வைத்தீஸ்வரன் கோவிலில் சூர்யன், அங்காரகன் நீங்கலாக மற்ற கிரகங்கள் வரிசையாக நிற்கின்றன. அங்காரகனுக்குத் தனிச் சந்நிதி உள்ளது.

இராமேஸ்வரம் அருகில் உள்ள தேவி பட்டிணத்தில் ஒன்பது கற்களாகக் (நவபாஷாணம்) கடலில் அமைந்துள்ளது. இராமர் பிரதிஷ்டை செய்து பிரார்த்தனை செய்த இடம் என்பர்.

தென்காசி காசி விசுவநாதர் கோவிலில் ஒரே திசையில் ஒரே கல்லில், ஒரே வரிசையாக நவக்கிரகங்கள் இருக்கின்றன.

திருத்துறைப்பூண்டி பவ ஒளஷதீசுவரர் கோவிலில் ஐந்து கிரகங்கள் நின்ற நிலையிலும் மற்ற நான்கு கிரகங்கள் அமர்ந்த நிலையிலும் உள்ளன. சூரியனுக்குத் தனியாக வேறொரு சிலையும் அருகில் உள்ளது.

திருவாமானை - ஆடானை நாதர் கோவிலில் சூரியனுக்கு உபய தேவி மார்களுடன் மற்ற சிவாலயங்களில் இல்லாத தேஜஸ்சண்டர் சூரிய சண்டிகேசுவரருடன் தனிச் சந்நிதி மேற்கு நோக்கி உள்ளது.

பெரியார் மாவட்டம் சென்னிமலை முருகன் கோவிலில் நவக்கிரகங்கள் வெளிப்புறச்சுவரில் வடபுறப்புரையில் புதனும், தென்புறப் புரையில் சனியும், தென்புற வெளிச்சுவரிலுள்ள புரையில் இருவர், வடபுறச் சுவரிலுள்ள புரையில் மூவர் எனக் காணப்படுகின்றனர். வாயிலின் இருபுறமும் சூரியனும், சந்திரனும் அமைக்கப்பட்டுள்ளனர். இதைத்தவிர தனியாகவும் சந்நிதி உள்ளது. மூலவரை வலம் வரும் போதே நவக்கிரகங்களையும் வலம் வருமாறு சுவற்றில் அமைக்கப்பட்டுள்ளன.

இவ்வாறு ஒன்பது கிரகங்களும் ஒவ்வொரு கோவிலிலும் இருப்பினும், சில கிரகங்கள் சில தலங்களில் சிறப்பாக வழிபடப் படுகின்றன. அவைகளை இப்போது பார்ப்போம்.

## சூரியன்

சூரியனார் கோவில் - தஞ்சாவூர் மாவட்டத்தில் கும்பகோணத்திற்கு அருகிலுள்ளது. இக்கோவிலில் எல்லா கிரகங்களும், சூரிய பகவானை நோக்கியே இருக்கும். சூரியன், உஷா, ப்ரத்யுஷா என்னும் இரு தேவியர்களுடன் இருக்கிறார். சூரியனை நோக்கிய வண்ணம் குரு பகவான் நிற்கிறார். சூரியனுடைய வாகனமான "சப்தா" என்ற குதிரையும் உள்ளது. இங்குள்ள விநாயகர் - கோள் தீர்த்த விநாயகர் என்றழைக்கப்படுகிறார். தீர்த்தம், - சூரிய தீர்த்தம். இக்கோவிலை வலம் வருபவர் அப்பிரதட்சிணமாகவே வருகின்றனர். அதே முறையில் நவக்கிரகங்களும் பிரதிஷ்டை செய்யப்பெற்றுள்ளன.

காஞ்சிபுரம் கச்சபேசுவரர் கோவில் குளம் தீர்த்தம் - சூரிய தீர்த்தம். இங்கு கார்த்திகை மாதம் ஞாயிறு ஸ்நானம் விசேஷம். மயூரகவி, 'மயூர சதகம்' எழுதியது இங்குதான்.

கங்கை கொண்ட சோழபுரத்தில் - சூரியன் தாமரை மலர் மேல் உள்ளார். மற்ற கிரகங்களும் சாரதி அருணனும் கூட உள்ளனர்.

கண்டியூர் - தஞ்சை மாவட்டம் திருவையாறு அருகில் உள்ளது. இதுவும் சூரியனுக்கு உகந்த ஸ்தலம். இங்கு சிவபெருமான் பிரம்மனின் ஒருதலையைக் கிள்ளியதால் பிரம்மசிரக் கண்டீசர் எனப் பெயர் பெற்றார். சிவனுக்கு பிரம்மஹத்தி தோஷம் உண்டானதால் அருகிலேயே உள்ள ஹர சாப விமோசனப் பெருமாளை வேண்டி தோஷ நிவர்த்தியடைந்தார். இங்கு பிரம்மாவுக்கு ஒரு கோவில் இருந்தது. தற்சமயம் பழுதடைந்து இருப்பதால் பிரம்மாவின் சிலை சிவன் கோவிலில் வைக்கப்பட்டுள்ளது.

சென்னைக்கருகிலுள்ள கோயம்போடு குசலவபுரீசுவரர் கோவில் சூரியனை உஷா, பிரத்யுஷா தேவியருடன் தரிசிக்கலாம்.

தென்னாற்காடு மாவட்டத்தில் திருவரங்கம் அருகில் ஜம்பை என்ற ஊரில் சூரியனுக்குத் தனிக்கோவில் உண்டு. பெயர் கண்டராதித்ய ஆதித்ய ஹ்ருதயம்.

கும்பகோணம் நாகேசுவர சுவாமி கோவிலிலும் சூரியனுக்குத் தனிச் சந்நிதி உண்டு.

திருவெண்காட்டில் சூரிய தீர்த்தம் உள்ளது.

வட ஆற்காடு மாவட்டம் செய்யாறு வேதபுரீஸ்வரர் கோவிலில் இறைவனை வழிபட்டு சூரியன் சக்கரத் தேரைப் பெற்றதாக ஐதீகம்.

ஆந்திர பிரதேசத்தில் ஸ்ரீகாகுளம் மாவட்டத்தில் அரசவல்லி என்ற ஊரிலும் சூரிய நாராயணர் ஆலயம் ஒன்று உள்ளது.

ஒரிசாவில் - கோனாரக் என்ற இடத்தில் சூரியனுக்கு பிரசித்தமான கோவில் ஒன்றுண்டு.

அகமதாபாத் அருகில் முதேரா வில் உள்ள ஆலயத்தில் சூரிய விக்கிரகம் இல்லை. ஆனால் மண்டபத்தில் பக்கத்திற்கு நான்காக 12 ஆதித்தியர்களின் சிலைகள் உள்ளன.

பாகிஸ்தானில் உள்ள மூல் டானில் 2000 ஆண்டுகளுக்கு முன்பு கட்டப்பட்ட சூரியன் ஆலயம் ஒன்றுள்ளது.

இதைத் தவிர கீழே குறிப்பிட்டுள்ள சில கோவில்களில் ஆண்டுக்கு ஒரு முறையோ, இரு முறையோ சில குறிப்பிட்ட தினங்களில் சூரிய கிரணங்கள் சுவாமி மேல் படும் வண்ணம் கட்டப்பட்டுள்ளது.

சித்திரை மாதம் - கும்பகோணம் நாகேசுவரசுவாமி கோவில், பனங்காட்டூர், ஆடுதுறை, திருநாகேசுவரம்.

புரட்டாசி - திருக்கடலூர், திருப்பைஞ்ஞீலி, வைத்தீஸ்வரன் கோவில்.

ஐப்பசி - ஏத்தாப்பூர் சாம்பமூர்த்தி கோவில்.

மாசி - கண்டியூர், குன்றத்தூர் சேக்கிழார், திருவழுந்தூர், திருச்சேறை.

பங்குனி - மாயவரம் வள்ளலார், நாகலாபுரம், வேதிக்குடி, திருத்தணிகை, நாவலூர், திருவாய்மூர், திருஅன்னியூர்.

## சந்திரன்

சந்திரனுக்கு உகந்த தலங்கள் திருப்பதி, திங்களூர்.

திருவேங்கடம் சிறப்பான சந்திர க்ஷேத்திரம். இங்கு அருள் பாலிக்கும் வேங்கடாஜலபதியைப் பூஜித்தால் சந்திரனால் ஏற்படும் தோஷங்கள் விலகும்.

திங்களூர் தஞ்சைமாவட்டத்தில் திருவையாறு அருகில் உளளது. தேவாரப்பாடல் பெற்ற திருத்தலம். சந்திரனுடைய கிரணங்கள் பங்குனி, புரட்டாசி மாதங்களில் பௌர்ணமியின் போது சுவாமியின் மீது விழுகின்றது.

திருமயம் - புதுக்கோட்டை மாவட்டத்திலுள்ளது. சந்திரன் தவம் செய்த இடம்.

திருவிந்தளூர் - மாயவரம் அருகிலுள்ளது.

சந்திரனுக்குப் பிரத்யக்ஷமான தெய்வம் பரிமள ரங்கநாதர். தாயாருக்கு சந்திர சாப விமோசனவல்லி என்று ஒரு பெயரும் உண்டு. கடைமுக ஸ்நானமும், முடவன் முழுக்கு ஸ்நானமும் இங்கு விசேஷம்.

காஞ்சிபுரத்தில் ஏகாம்பரநாதர் கோவிலிலுள்ள நிலாத் துண்டப் பெருமாள் சந்திரனுக்குப் பிரீதியான தெய்வமாகும்.

திருவட்டாறு - ஆதிகேசவப் பெருமாள் கோவில் சந்திரனுக்கும், பரசுராமருக்கும் பிரத்தியக்ஷமான இடம். இக்கோவில் கன்னியாகுமரி மாவட்டத்தில் உள்ளது.

திருமணிக்கூடம் - திருநாங்கூர் - சீர்காழி அருகில் உள்ளது. இங்குள்ள வரதராஜப்பெருமாள் கோவிலில் சந்திர புஷ்கரணி உள்ளது.

திருக்கருகாவூர், திருவிடைமருதூர், திருக்கோவிலூர், திருவான்மியூர், திருக்கட்டளை முதலிய இடங்கள் சந்திரனுடன் சம்பந்தப்பட்ட கோவில்கள்.

திருவெண்காட்டில் சந்திர தீர்த்தம் உள்ளது. (சூரிய தீர்த்தமும் உள்ளது.)

## செவ்வாய்: அங்காரகன்

வைத்தீசுவரன் கோவில் - தஞ்சாவூர் மாவட்டத்தில் உள்ளது. இது ஒரு அங்காரக க்ஷேத்திரம். அங்காரகனுக்குத் தனி சந்நிதி உள்ளது. செவ்வாய்க்கிழமை தோறும் மாலையில் அங்காரகன் ஆட்டுக்கடா வாகனத்தில் பிரகாரத்தைச் சுற்றி வருவது வழக்கம்.

திருச்சிறுகுடி - மங்களேசுவரர் கோவில் மாயவரத்திற்கு அருகிலுள்ளது. இதுவும் அங்காரகனுக்கு உகந்த க்ஷேத்திரம் எனக்கூறப்படுகிறது.

பழநி - முருகன் கோவில். அங்காரகன் வழிபட்டதலம்.

ஸ்ரீமுஷ்ணம் - வராகப் பிரான் பூமிப்பிராட்டிக்கு அருள்பாலித்த இடம். செவ்வாய் - பூமி காரகன். எனவே இதுவும் செவ்வாய்க்கு உகந்த தலம் என்பர்.

செவ்வாய்க்கு அதிதேவதை ஸுப்ரமண்யர். "ஸேநாநீநாம் அஹம் ஸ்கந்த:" என்று கீதையில் பகவான் கூறியதால் செவ்வாய்ப்ரீதியை திருவல்லிக்கேணி பார்த்தசாரதி கோவிலிலும் அர்ச்சனையாகச் செய்யலாம் என்பர்.

## புதன்

புதனுக்கு உகந்த இடம் மதுரை. மதுரை-ஆலவாய்-மீனாக்ஷி சொக்கநாதரை புத பகவான் பூஜித்துப் பேறு பெற்ற தலம். புதனுக்கு தஞ்சை மாவட்டம் திருவெண்காட்டிலும் தனிச் சந்நிதி உள்ளது.

புதன் பிரதிஷ்டை செய்த இலிங்கம் காசியில் உள்ளது.

## வியாழன் - குரு

குருவிற்கு உகந்த க்ஷேத்திரம் - திருச்செந்தூர். மூலவர் நான்கு கைகளுடன் (அபயஹஸ்தம், வரத ஹஸ்தம், ஒரு கரத்தில் பூமாலை, மற்றொரு கரத்தில் ஜபமாலை) அருகில் ஜகந்நாத லிங்

கத்தைப் பூஜித்துக்கொண்டிருக்கிறார்.

சோழ நாட்டில் திருத்தேவூர் என்னுமிடத்திலும் தனிச் சந்நிதி உள்ளது.

திரு இரும்பூளை என்னும் ஆலங்குடியில் குரு தக்ஷிணாமூர்த்தியாக விளங்குகிறார். இங்கு குருபெயர்ச்சி விசேஷமாகக் கொண்டாடப்படுகிறது. தஞ்சாவூர் மாவட்டத்தில் கும்பகோணத்திற்கு அருகில் உள்ளது.

செங்கல்பட்டு மாவட்டம் அகரம் கோவிந்தவாடி என்ற ஊரில் யோக தக்ஷிணாமூர்த்தியாகத் தனிக்கோவில் கொண்டு விளங்குகிறார்.

திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள திருக்குளந்தை ஸ்ரீநிவாசன், பிரகஸ்பதிக்கு பிரத்யக்ஷமான தெய்வம்.

வடநாட்டில் குருவின் கதியைக் கொண்டு வருஷங்களை நிர்ணயிப்பதுண்டு. இதற்கு பார்ஹஸ் பத்யமானம் எனப் பெயர்.

சிம்ம ராசியில் குருவும், மகத்தில் சந்திரனும் உள்ள மாசிமகம், மகாமகம் என விசேடமாகக் குடந்தையில் கொண்டாடப்படுகிறது. கடைசியாக 1992ம் ஆண்டு மகாமகம் நடைபெற்றது.

## சுக்கிரன் (வெள்ளி)

சுக்கிரனுக்கு உகந்த இடம் திருவரங்கம். அரங்கநாதப்பெருமானை வேண்டி சுக்கிரப் ப்ரீதி செய்து கொள்ளலாம்.

மயிலை வெள்ளீசுவரர் கோவிலில் சுக்கிரனுக்குத் தனிக்கோவில் உள்ளது.

திருநாவலூர், திருநாவலேசுவர் கோவிலும் சுக்கிரனுக்கு உகந்த தலமாகும்.

தென் ஆற்காடு மாவட்டம் திருக்கோவலூர சுக்கிரன் கண்ணை இழந்த இடம். இங்கு சுக்ர தீர்த்தம் உள்ளது.

திருவெள்ளியங்குடியில சுக்கிரனுககு பிரத்யட்சமான இடம். இங்கு சுக்கிரன் இழந்த கண்ணைப் பெற்றார். சுக்ர தீர்தகம் உள்ளது.

"வெள்ளியார் வணங்க விரைந்தருள் செய்வான்" என்று திருமங்கையாழ்வார் பாடியுள்ளார்.

"மிக்க பெரும்புகழ் மாவள வேள்வியில்
தக்கது இதன்று என்று தானம் விலக்கிய
சுக்கிரன் கண்ணைத் துரும்பால் கிளறிய
சக்கரக் கையனே அச்சோ! அச்சோ!!
சங்கமிடத்தானே அச்சோ! அச்சோ!!"

என்று பெரியாழ்வார் பாடியுள்ளார்.

## சனி

திருநள்ளாறு - தர்ப்பாரணியேசுவரர் கோவில். இங்கு சனிபகவான் தர்பாரணியேசுவரரை ஸ்தாபித்து தன் ஸவரூப பிம்பத்தினடியில் தன் யந்திரத்தை ஸ்தாபித்துக் கொண்டிருக்கிறார். நள மகாராஜன் இந்த க்ஷேத்திரத்தில் சனீஸ்வர பகவானிடம் சாப விமோசனம் பெற்றார். நளனுடைய விருப்பத்திற்கு இணங்கியே ஈசன் சனீஸ்வரருக்கு இந்த க்ஷேத்திரத்தில் ஒரு ஸ்திரமான ஆலயம் ஏற்பட வரமளித்தார் என்று புராணம் கூறுகிறது. இங்குள்ள தீர்த்தம் - நளதீர்த்தம். இத்தலம் காரைக்கால் அருகில் உள்ளது. சப்த விடங்கத் தலங்களில் ஒன்று, இறைவன் இங்கு ஆடிய நடனம் - உன்மத்த நடனம்.

குச்சனூர் - மதுரை மாவட்டத்தில் தேனீ நகருக்கருகில் உள்ளது. சுருளி நதி மேலுள்ளது. இங்கு தலமூர்த்தி சனீஸ்வரனே. மூலவர் சுயம்புவாகத் தோன்றியவர். லிங்க வடிவில் சற்று அகன்றுள்ளது. மற்றும் விநாயகர், பாலசுப்ரமணியர், லாடசன்னியாசி, சோனைக கருப்பணசாமி முதலியோரும் உள்ளனர்.

மேற்கு மாம்பலததில் வெங்கடாசலய்யர் தெருவில் வட திருநள்ளாறு சனீஸ்வர பகவான் கோவிலுள்ளது.

பசும்பொன் மாவட்டத்தில் சிவகங்கையிலும் சனீஸ்வர பகவானுக்குக் கோவில் உள்ளது.

தசரதச் சக்கரவர்த்தி சனி அஷ்டகம் பாடியுள்ளார்.

"கார்க்கோடகஸ்ய நாகஸ்ய தமயந்த்யா: நளஸ்யச
ருது பர்ணஸ்ய ராஜர்ஷே, கீர்த்தனம் கலிநாசனம்

என்ற வரிகளைச் சொல்லி சனீஸ்வரரை வணங்கலாம்.

## ராகு

காஞ்சிபுரம் உலகளந்தார் கோவிலில் உள்ள ஊரகம் - இச்சந்நிதியில் ஆதிசேஷனாய் திருக்கோலம் கொண்டுள்ளார். தீர்த்தம் - நாகதீர்த்தம் (சேஷ தீர்த்தம்) என்பர்.

திருநாகேசுரம் - தஞ்சைமாவட்டம் கும்பகோணம் அருகிலுள்ளது. இங்குள்ள நாதநாதசுவாமி கோவில் நாகராஜன் பூஜித்த தலம். இங்கு ராகு சன்னதி விசேஷம். ராகு பகவானுக்குப் பால் அபிஷேகம் செய்யும் போது அது நீலநிறமாக நம் கண்களுக்குத் தெரிகிறது.

திருக்காளத்தி - காளஹஸ்தி என்றழைக்கப்படும் இத்தலம் ஆந்திராவில் திருப்பதிக்கருகேயுள்ளது. பஞ்சலிங்க க்ஷேத்திரங்களில் வாயு க்ஷேத்திரம். இங்கு ஆதிசேஷன் இறைவனைப் பூஜித்துப் பேறு பெற்றார்.

சென்னையை அடுத்துள்ள திருநீர மலையில் அரங்கநாதப் பெருமாள் மலைமேல் பாம்பில் சயனம் கொண்டுள்ளதால், இங்கு கிரி பிரதக்ஷணம் செய்தால் ராகுப் ப்ரீதியாகும்.

## கேது

கோவை மாவட்டம் திருமுருகன் பூண்டியில் கேதுவுக்கு கோவில் உள்ளது.

அதிதேவதை சித்ர குப்தனுக்கு காஞ்சியில் தனிக்கோவில் உள்ளது.

## வழிபாடுகள்

**ஆதித்ய ஹிருதயம்:** இராமச்சந்திர மூர்த்தி அகஸ்தியர் உபதேசத்தால் சூரிய பகவானைப் போற்றி இந்த ஸ்தோத்திரத்தைக் கூறி இராம இராவண யுத்தத்தில் வெற்றி கண்டார்.

## பாதுகா சகஸ்ரம்

"கநக ருசிரா காவ்யாக்யாதா
சநைந் சரணேசிதா
ச்ரித குரு புதா பாஸ்வத்ரூபா
த்வி ஜாதிப ஸேவிதா!
விஹித விபவா நித்யம் விஷ்ணோ;
பதே மணி பாதுகே
த்வமஸி மஹதீ விச்வேஷாம் ந:
சுபாக்ரஹ மண்டலீ"

என்று வேதாந்த தேசிகர் கிரகங்களைப் பற்றி பாடியுள்ளார்.

## தசாவதார ஸ்தோத்ரம்

1. ஸ்ரீ மத்ஸ்யாவதாரம் கேது
2. ஸ்ரீ கூர்மாவதாரம் - சனி
3. ஸ்ரீ வராஹாவதாரம் - ராகு
4. ஸ்ரீ நருசிம்ஹாவதாரம் - செவ்வாய்
5. ஸ்ரீ வாமனாவதாரம் - குரு
6. ஸ்ரீ பரசுராமவதாரம் - சுக்கிரன்
7. ஸ்ரீ ராமாவதாரம் - சூரியன்
8. ஸ்ரீ பலராமாவதாரம் - குளிகன்
9. ஸ்ரீ க்ருஷ்ணவதாரம் - சந்திரன்
10. ஸ்ரீ கல்கி அவதாரம் - புதன்

வேதாந்த மகாதேசிகர் பாடியுள்ளது. ஒவ்வொரு அவதாரமும் ஒவ்வொரு கிரகத்திற்கு பிரீதியாகும்.

முத்துஸ்வாமி தீக்ஷிதர் நவக்கிரகங்களைப் பற்றி கீர்த்தனைகள் இயற்றியுள்ளார்.

"சூர்ய மூர்த்தே நமஸ்துதே
சந்திரம் பஜமானஸ
அங்காரக மாஸ்ரயாம்
புதன் மாஸ்ரயாமி
ப்ருஹஸ்பதே தாராபதே
ஸ்ரீசுக்ர பகவந்தம் சிந்தயாமி
திவாகர நுஜம் சனைஸ்சரம்
ஸமராம் யஹம் ஸதா ராகும்
மஹாஸு்ரம் கேதுமஹம் பஜாமி

என்று கீர்த்தனைகள் இயற்றியுள்ளார்.

புரந்தரதாஸரும் "ஸகல க்ரக பலநீனே" என்ற கிருதியில் நவக்கிரகங்களை அமைத்துள்ளார்.

மூகர், மூக பஞ்ச சதியில் பாதார விந்த சதகத்தில் நவக்கிரங்களைப் பற்றிக் குறிப்பிட்ட எல்லாப் பலன்களையும் தேவியின் பாதங்களில் சரணடைந்து பெற்றுவிடலாம் என்று கூறியுள்ளார்.

"த நாநோ பாஸ்வத்தாம் அம்ருத
நிலயோ லோகித வபு:
விநம்ராணும் சௌம்யோ குரு:
அபி கவத்வம் சகலயந்
கதௌ மந்தோ கங்காதர
மஹிஷி காமாக்ஷி பஜதாம்
தம்: கேது: மாத: தவசரண
பத்மோ விஜயதே!"

இறுதியாக கந்தரலங்காரத்தில் அருணகிரிநாதர்,

"நாளென் செயும் வினைதானென்
செயு மெனை நாடி வந்த
கோளென் செயுங் கொடுங்கூற்றென்
செயுங் குமரேசரிரு
தாளுஞ் சிலம்புஞ் சதங்கையுந்
தண்டையுஞ் சண்முகமுந்
தோளுங் கடம்பு மெனக்கு முன்னே
வந்து தோன்றிடினே"

முருகனைத் தரிசித்தால் பக்தர்களை நட்சத்திரம், திதி, யோகம் முதலிய தீமை பயக்க நின்ற கோள்கள் ஒன்றும் செய்யமாட்டாது வலியிழந்து நிற்கும் என்று கூறுகிறார்.

ஆகவே கோள்களின் பிடிகளில் இருந்து விடுபட அன்பர்கள் தங்கள் இஷ்ட தேவதைகளை வணங்கியும், கிரகங்கள் வழிபட்ட இடங்களையும், கிரகங்கள் குடி கொண்டுள்ள கோவில்களில் அவைகளை வணங்கியும் கிரகங்களின் அருள்பெறல் நன்மை பயக்கும்.



(தொடர் கட்டுரை)

# ஸஹஸ்ர நாமம்

## நம்மாழ்வார் விளக்கம்

திரு. T.S. இராஜகோபாலன் - சென்னை.



பூத பவ்ய பவந் - நாத:
பவந: பாவநோऽநல: ।
காமஹா காமக்ருத் காந்த:
காம: காமப்ரத: ப்ரபு: ।। 32 ।।

**291.** பூத பவ்ய-பவந்நாத : இறந்த காலம், நிகழ்காலம், வருங்காலம் இவற்றில் உள்ளவர்களுககு நாதன்; எக்காலத்திலும் யாவர்க்கும் அருள் செய்பவன்.

வருங்காலம், நிகழ்காலம், கழிகால மாய்
............அளிப்பாய் (3-1-5)

**292.** பவந : காற்றைப்போல் எங்குந் திரிந்து, படர்ந்து, கரந்து, எங்கும் பரவியிருப்பவன்.

கரந்து எங்கும் பரந்துளன் (1-1-10)

**293.** பாவந : கங்கை முதலான தீர்ததங்கள் போல், தனது அனபரைப் பரிசுத்தராகச் செய்பவன்.

......என் மாணிக்கச் சோதியைத்
தூய அமுதைப் பருகிப் பருகி, என்
மாயப் பிறவி மயர்வு அறுத்தேனே (1-7-3)

**294.** அநல : அன்பர்க்கு நல்லருள எவ்வளவு செய்தாலும், போதும் என்ற எண்ணம் இல்லாதவன்.

பகல் இரா என்பதுவும் பாவியாது, எம்மை
இகல் செய்து, இருபொழுதும் ஆள்வர்.
(பெ.திரு. 81)

[இகல் செய்து-வசீகரித்து.]

**295.** காமஹா : தனது கல்யாண குணஙகளில் ஆழ்ந்தவர்களுக்கு இதர விஷயங்களில் விருப்பத்தை அழிப்பவன்.

திருமகளும் நீயுமே நிலாநிற்ப.....அளவில்லாச்
சிற்றின்பம் ஒழிந்தேன், அடைந்தேன்
திருவடியே (4-9-10)

[நிலாநிற்ப-உடையவராக விளங்க. ஒழிந்தேன்-விட்டேன்.]

**296.** காம க்ருத் : தன்னிடம் காதலை விளைவிப்பவன்.

காதல் கடல் புரைய விளைவித்த (5-4-3)

[கடல் புரைய-கடலைப் போல் பரந்ததாக.]

**297.** காந்த : திருமேனி அழகாலும் குணங்களாலும் யாவராலும் விரும்பப் படுவோன்.

வல்வினை ஈர்கின்ற குணங்களை உடையாய்
(8-1-8)

**298. காம :** சீலம்; ஔதார்யம் போன்ற குணங்களாலே யாவராலும் விரும்பப்படு வோன்.

*ஆராவமுதாய் அடியேன் ஆவி அகமே*
*தித்திப்பாய்* (5-9-10)

[அடியேன் ஆவிஅகமே-உன்னுடைய சொத்தான என் நெஞ்சினுள்ளே. தித்திப்பாய்- உன்னையும் உன் குணங்களையும் அனுபவித்து இன்புறச் செய்வாய்.]

**299. காமப்ரத :** நால்வகை விருப்பங்களையும் அளிப்பவன்.

*வேண்டிற்று எல்லாம் தரும், என் கோதில்*
*வள்ளல்* (3-9-5)

[வேண்டிற்று எல்லாம்-போகமும் மோக்ஷமும், கோது-குற்றம், கோது இல்-தன்பேறுகக் கொடுப்பது]

**300. ப்ரபு :** மேற்கூறிய குணங்களால் எல்லாருடைய மனத்தையும் கவருமவன்.

*மையல் செய்து, என்னை மனங் கவர்ந்தானே*
(7-1-6)

## 10. ஆலிலையில் துயில்வோன்

*யுகாதிக்ருத் யுகாவர்த்தோ*
*நைகமாயோ மஹாசந: ।*
*அத்ருச்யோ வ்யக்த ரூபச் ச*
*ஸஹஸ்ரஜி தநந்த ஜித் ।। 33 ।।*

**301. யுகாதிக்ருத் :** ப்ரளய காலம் முடிந்ததும் மீண்டும் உலகைப் படைப்பவன். (ப்ரளய காலத்தில் ஆலிலைமேல் சயனித்து, உலகைப் படைத்துக் காக்கும் வகைகளைச் சிந்தனை செய்கிறான்.)

*தடங்கடல் சேர்ந்த பிரானை* (3-5-6)

**302. யுகாவர்த்த :** இவ்வாறு நான்கு யுகங்களையும் மீண்டும் மீண்டும் வரச்செய்பவன்.

*ஊழிதோறூழி... வையம் காக்கும்* (7-3-11)

**303. நைகமாய :** ப்ரளய காலத்தில் ஆலிலையின் மேல் பள்ளிகொள்ளுதல் போன்ற பல ஆச்சர்யமான செயல்கள் செய்பவன்.

*மயக்குடை மாயைகள் வானிலும் பெரியன*
*வல்லன்* (1-3-10)

**304. மஹாசந :** பெருமளவு உண்பவன், ப்ரளய காலத்தில் உலகமுண்டவனாதலால்.

*உலகம் உண்ட பெருவாயா* (6-10-1)

**305. அத்ருச்ய :** கண்ணுல் காணமுடியாதவன்; ஊகிக்கமுடியாத செயல்கள் உடையவன்.

*கட்கரிய கண்ணனை* (7-7-11)

[கட்கு அரிய-கண்களால் காணமுடியாத.]

*கோணை பெரிதுடைத்து-எம்மானைக்*
*கூறுதலே* (2-5-10)

[கோணை-மினுக்கு]

**306. வ்யக்தரூப :** தனது கருணையினால் வெளிப்படுத்தும் திவ்ய மங்கள விக்ரஹம் உடையவன்; மார்க்கண்டேயன் போல்வாருக்கு அறியக்கூடிய வடிவுடையவன்.

*அணியனாகும் தனதாள் அடைந்தார்க்கெல்லாம்*
(9-10-6)

[அணியன் ஆகும்-சுலபன் ஆவான்.]

**307. ஸஹஸ்ரஜித் :** இவ்வாறு அளவில்லாத காலம் யோகத்தில் இருப்பவன்.

*வெள்ளத்தடங்கடலுள்விட நாகணைமேல்*
*மருவி, உள்ளப் பல் யோகு செய்தி* (7-8-4)

[செய்தி-செய்கிறாய்]

**308. அநந்தஜித் :** இவ்வாறு சிறிய பாலகனாயினும், தனது பெருமை யாவராலும் காணக்கூடாதவன்.

*பாலாழி நீ கிடக்கும் பண்பை, யாம் கேட்டேயும்*
*காலாழும், நெஞ்சழியும், கண் சுழலும்*
(பெ.திரு. 34)

[பால்ஆழி-திருப்பாற்கடல்.]

*இஷ்டோऽவிசிஷ்டச் சிஷ்டேஷ்ட:*
*சிகண்டீ நஹுஷோ வ்ருஷ: ।*
*க்ரோதஹா க்ரோதக்ருத் கர்த்தா*
*விச்வபாஹுர் மஹீதர: ।। 34 ।।*

**309. இஷ்ட :** தனது க்ருபையால் தாய் போல் விளங்கி, யாவராலும் விரும்பப்பெறுவோன்.

விழுமிய அமரர் முனிவர் விழுங்கும்
கன்னற் கனியினை (3-6-7)

[கன்னல்-வெல்லம், கன்னல் கனி-கன்னலே மரமாகிப் பழுத்த கனி.]

**310. அவிசிஷ்ட :** இவ்வாறு தனிப்பெருமை உடையவன்.

பள்ளி ஆலிலை ஏழுலகுங் கொள்ளும்
வள்ளல் வல் வயிற்றுப் பெருமான் (2-2-7)

**311. சிஷ்டேஷ்ட :** மார்க்கண்டேயன் போன்ற சிறந்தோரால் விரும்பப் படுவோன்.

வேத நாவர் விரும்பும் (திருக்கண்ணபுரத்து)
ஆதியானை (9-10-9)

**312. சிகண்டீ :** அளவு கடந்த ஐச்வர்யமாகிய சிறந்த மகிமையே சிரோபூஷணமாக உடையவன்.

ஒண் சுடர்க் கற்றையை (1-7-4)

[சிகண்டி-கொண்டை; சுடற்கற்றை.]

**313. நஹுஷ;** தன் மகிமையால் யாவரையும் கட்டவல்லவன்.

மாயங்கள் செய்து வைத்தி (7-8-5)

**314. வ்ருஷ:** திருமேனியின் காந்தியாலும் இன்சொற்களாலும் அன்பர்களை (மார்க்கண்டேயன் போல்வரை) உள்ளங் குளிரச் செய்பவன்.

ஒருவிடம் ஒன்றும் இன்றி என்னுள் கலந்தானை (2-5-2)

பலபலவே சோதி வடிவு பண்பு எண்ணில் (2-5-6)

## 11. பரசுராமாவதாரம்

தான் படைத்த உலகில் தீயோர்களாகிய களையைக் களைய ஏற்ற அவதாரம்.

**315. க்ரோதஹா :** பரசுராமனாக அவதரித்து மன்னர்களை இருபத்தொருகால் வேரறுத்துக் கோபம் தணிந்தவன்.

**316. க்ரோதக்ருத் :** கார்த்தவீர்யனை எதிர்த்து அவனிடம் கோபம் விளைவித்தவன்.

**317. கர்த்தா :** தனது கோபத்திற்குக் காரணமான கார்த்த வீர்யனைக் கொன்றவன்.

**318. விச்வ பாஹு :** எங்குந்திரிந்து தீயோரைக் கொன்றதால், எங்கும் நிறைந்த புஜபலம் வாய்ந்தவன்.

இருபத்தோர் கால் அரசு களைகட்ட,

வென்றி நீள் மழுவா! (6-2-10)

[வென்றி-வெற்றி, மழு-கோடரி]

**319. மஹீதர :** பூமி பாரங்களான துஷ்டர்களை மாய்ந்து பூமியை நிலைநிறுத்தியவன்.

வென்றிநீள் மழுவா! வியன்ஞாலம்
முன் படைத்தாய், (6-2-10)

(தொடரும்)


## அறிவிப்பு

திருமலை திருப்பதி தேவஸ்தானம் அந்தந்த மாநில இந்து சமயம் மற்றும் அறநிலையத்துறையின்கீழ் பதிவு செய்யப்பெற்றக் கோயில்கள் பயனுறும் வகையில் கீழ்வரும் சலுகைகள் வழங்கியுள்ளது.



கோயில்களுக்குத் தேவையான கோயில்குடைகளை தி.தி.தேவஸ்தானம் 50% தள்ளுபடி விலையில் வழங்கி வருகிறது. இதற்கு அந்தந்த கோயிலுக்குரிய செயலாட்சித் தலைவரின் விண்ணப்பக் கடிதத்துடன் இரண்டு குடைகளுக்காக ரூ.900/-அனுப்புதல் வேண்டும்.



கோயில்களுக்கான ஒலிப் பெருக்கிக் கருவிகளை 50% தள்ளுபடி விலையில் தி.தி. தேவஸ்தானம் வழங்கிவருகின்றது. இதற்கு அந்தந்த கோயிலுக்குரிய செயலாட்சித் தலைவரின் விண்ணப்பக் கடிதத்துடன் ரூ. 3370/- அனுப்புதல் வேண்டும்.

முழுவிபரங்களுக்குச் 'செயலாட்சித் தலைவர், தி.தி. தேவஸ்தானம், திருப்பதி' எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

# யோகி வேமனா காட்டும் வாழ்க்கை நெறி

திரு. பா. அன்பரசு - சேலம்.

சுமார் முந்நூறு ஆண்டுகளுக்கு முன்பு ஆந்திர மாநிலத்தில் வாழ்ந்தவர் யோகி வேமனா. இவரைப் பற்றிய கதைகள் ஏராளம். வேமனாவின் பாடல்களைப போலப் பிறர் எழுதிச் சேர்த்து வெளியிட்ட பாடல்கள் இன்று மூவாயிரமாக வளர்ந்துள்ளன. நிருவாணக் கோலத்தில அவர் அமர்ந்திருப்பது போன்ற மேலட்டையுடன் பல பதிப்புகள் வெளிவந்து விட்டன. வேமனாவின் பாடல்களில் கடைசிவரி 'வினர வேமா' என்னும் முத்திரையுடன் முடிகிறது. 'கேளாய் வேமா' என்பதே இதன் பொருளாகும்.

"கடனில்லாதவன் பலசாலி யாவான். பாடும் பயிற்சியால இராகம் இனிமையாகும். தின்னத் தின்ன வேப்பங்காயும் இனிமையாகும். எல்லாவற்றையும் பயிற்சியால் சாதிக்கலாம். ஒரு பானை கழுதைப்பாலைக் காட்டிலும் ஒரு கரண்டி பசுவின பால மேலானது."

"மரத்திற்குள் நெருப்பு இருக்கலாம்; நெருப்புக்குள் மரம் இருக்க முடியாது. பிறப்பு - இறப்பு ஆகிய இரண்டில் சுதந்திரமில்லாத மனிதன் இடைக் காலத்தில் மட்டும் தனது விருப்பப் படிச் செயல்படத் துடிக்கிறான். இது சிரிப்புக்குரியது" - இவை யோகி வேமனாவின் தத்துவ முத்துக்கள்.

மற்ற இலக்கியவாதிகளைப் போல வேமனா நீண்ட காப்பியங்களையோ, பிரபந்தங்களையோ படைக்கவில்லை. இலக்கண அறிவு, யாப்பமைதி, கவித்துவம் அவரிடம் எள்ளளவும் இல்லை. இருப்பினும் எளிய நடையில் உயர்ந்த பாடல்களைப் பாடியுள்ளார் வேமனா. பாமர மக்கள் அன்றடம் பயன் படுத்தும் சொற்களையே அவர் பயன்படுத்தியுள்ளார். "Poetry is the Criticism" என்னும் மேத்யூ ஆர்னால்டு கருத்துக்கு ஏற்ப வேமனாவின் பாடல்கள் அமைந்துள்ளன.



வாழ்க்கையில் மனிதனை வழிமறிக்கும் சிக்கல்கள் பல. அவற்றைத் தமது நியாய வாதி அணுகுமுறையில் தீர்க்க வழி வகுத்துள்ளார் வேமனா. இவரது கருத்துக்கள் எந்த நாட்டவர்க்கும் எக்காலத்துக்கும் பொருத்தமானவை.

மனிதன் மகிழ்ச்சியுடன் வாழ வழி என்ன? மனிதப் பரிணாம வளர்ச்சியின் தொடக்கத்திலேயே இக்கேள்வி பிறந்து விட்டது. இன்றைய அறிவியல் யுகத்தில் மனிதன் இயற்கையை வென்று சாதனை படைத்துள்ளான். இடமும், காலமும் வசதி படைத்த ஒருவருக்குப் பெரிய செயல் அல்ல. இருந்த போதிலும் மனிதன் மகிழ்ச்சியாக இல்லை. ஏன்? மனிதனின் சுயநல உணர்வும், சூதுமதியும், அலட்சியப்போக்குமே காரணம்.

வேமனா மனித மனங்களை - அவற்றின ஆழத்தை அளக்கத் தெரிந்த ஒரு சிந்தனையாளர். உளவியல் அறிஞர். அறிவின் ஆற்றலையும், உடலின் ஆற்றலையும் காரணகாரியத்துடன் வெளிப்படுத்தி, நல்லது இது - கெட்டது இது ... பதை அறிந்து, தமது ...

மைகளையும், பொறுப்புக்களையும் நிறைவேற்ற வேண்டியது மானிடப் பிறவியின் நோக்கமாகும். இதை மனிதன் ஒருநாளும் மறத்தல் கூடாது. இதுவே வேமனாவின் சிந்தனைகளின் சாரமாகும்.

விதியை வென்றவர் யார்? முயற்சியால் எமனையும் வென்று விடலாம் என்று கூறிய வள்ளுவப் பெருந்தகை ஊழ் வினையையும் சிறப்பித்துக் கூறியுள்ளார். தம்மைச் சிந்தனையாளர்கள் என்று கூறிக்கொள்ளும் சிலர் இப்படிக் கூறுகிறார்கள். "மனிதன் படும் துன்பத்திற்குக் காரணம் அவனது முந்தைய கருமங்களே. பரம்பொருளின் விருப்பப்படியே அனைத்தும் நடக்கின்றன. மனிதன் ஒரு சிக்கலில் இருந்து விடுபடும் முன்பே வேறொரு சிக்கலில் மாட்டிக்கொள்கிறான். ஆகவே, மனிதனின் சிக்கல்கள் சங்கிலித் தொடர் போன்றவை". ஆனால் தமது கண்ணெதிரில் ஏழைகள் படும் துன்பத்தைக் கண்டு, தம்மால் உதவ முடிந்தும் கண்களை மூடிக்கொள்கிறார்கள் ஏன்?

தர்ம சாத்திரங்களில் பேசப்படும் சட்டங்களும், விதிகளும் நாட்டுக்கு நாடு வேறுபடுகின்றன. ஒரு நாட்டில் என்று ஏற்றுக்கொள்ளப்படும் செயல் வேறு நாட்டில் அநீதி என்று கருதப்படுகிறது. தருமமும், நீதியும் புத்தகங்களில் புதைந்து கிடப்பவை அல்ல. அவை மனித இதயங்களில் இருந்து பீறிட்டு எழுபவை. அவை இடம், காலம், சூழ்நிலைகளைப் பொருத்தவை.

நமது நாட்டிலோ தர்ம சாத்திரங்களுக்குப் பஞ்சமில்லை. அவற்றில் காணப்படும் சொல்ஜாலங்கள் வேறாக இருக்கலாம். ஆனால், பொருள் ஒன்றேதான். "உண்மையே பேசு. நல்லதே செய், அன்னையும், தந்தையும் வணக்கத்திற்கு உரியவர். மனிதனின் நல்ல நடத்தையே சிறப்பானதாகும். பிறருக்கு நன்மையே செய்". இவற்றைத்தான் வேமனா சிந்தித்தார். சிந்தனை ஒன்றாக இருந்தாலும் அணுகு முறைகள் வேறுபட்டவையாகும். அவரது போதனைகள், "ஏன்? எதற்காக?" என்னும் நியாயவாத அடிப்படையில் பிறந்தவை. நடைமுறைக்கு ஏற்றவை.

யோகி வேமனா வாழ்ந்த காலம் முடிமன்னர் வாழ்ந்த காலம். ஏழை - பணக்காரர் ஏற்றத்தாழ்வு அன்றும் இருந்தது. பணக்காரர்கள் செய்யும் தர்மங்கள் அனைத்தும் மேட்டுக்குடியினருக்கே. அந்தத் தர்மங்களும் வெளிவேடமே. தானம் கொடுப்பவர்களும், அவற்றைப் பெறுபவர்களும் வேடதாரிகளே.

"பசியால் வாடும் மக்கள் பராமரிக்கப்படவேண்டும். அவர்கள் நல்லவர் - தீயவர்; சாதியில் உயர்ந்தவர் - தாழ்ந்தவர் யாராக இருந்தாலும் சரி" இதுதான் வேமனா பொருள் படைத்தவர்களுக்கு விடும் அறைகூவல்.

"பசியால் வாடும். ஏழைகளுக்குத் தாராளமாக வாரி வாரி வழங்குங்கள். அனைத்து உயிர்களையும் நேசியுங்கள். உயிர்தான் கடவுள், மனிதன் வாழப் பிறந்தவன். வாழும் காலத்தில் அவன் அமைதியுடனும், மகிழ்ச்சியுடனும் வாழ வேண்டாமா?"

வேமனாவின் காலத்தில் வாழ்ந்த செல்வந்தர்கள் இவ்வாறு நினைத்தார்கள். "ஏழைகள், தங்கள் முற்பிறவியில் செய்த கர்ம வினையின் காரணமாக, அதற்குரிய பாவத்தை இந்தப் பிறவியில் அனுபவிக்கிறார்கள். இது அவர்களுக்குரிய தண்டனை" இது அவர்களின் நம்பிக்கை. ஆகவே எவ்வளவுதான் செல்வம் பெற்றிருந்தாலும் அதை ஏழைகளுக்கு கொடுக்க மறுத்தார்கள்.

"தான தர்மமுலனு தக ரேபு நேடனி
கால லயமு சேத கஷ்டமுப டு
தானு ஏமவ்னோ தன ப்ரதுகு
ஏமவ்னோ
மாய தெளியலேரு மஹினி வேமா"

என்கிறார் வேமனா.

'தான தர்மங்கள் செய்வதை நாளை நாளை என்று தள்ளிப்போடுகிறார்களே, அவர்கள் இரக்கத்திற்கு உரியவர்கள். தங்கள் வாழ்நாள் முடிந்து போனால் சேர்த்து வைத்த செல்வம் என்ன ஆகும்? இந்த மாயையை அறியமாட்டேன் என்கிறானே மனிதன்' என்கிறான் வேமனா.

வீர சைவ சமயம் தழைத்திருந்த காலத்தில் யோகி வேமனா வாழ்ந்ததாகச் சில ஆய்வாளர்கள் கூறுகிறார்கள். உலக இன்பங்களை வெறுத்துச் சில யோகிகளுடன் வேமனா தொடர்பு கொண்டிருந்ததாகவும் சிலர் நம்புகிறார்கள். இரசவாத வித்தை தெரிந்தவர் அவர் என்பார்கள் சிலர். ஹடயோகம் கைவரப் பெற்றவர் என்பதும் சிலரது கருத்தாகும்.

வேமனா எந்த வழியை பின்பற்றி இருந்தாலும், கடவுள் ஒருவரே என்னும் தமது ஆழ்ந்த நம்பிக்கையை,

"பசுல ரூப வேற பாலு ஒக்க
வர்ணமெ

புஷ்ப ஜாதி வேற பூஜ ஒக்கடே
தர்ணம்புல வேற தெய்வம்பு ஒக்கடே
விஸ்வதாபி ராம வினர வேமா''
என்று கூறுகிருர்.

'பசுக்களின் நிறம் வெவ்வேறு. பாலின் நிறம் ஒன்றுதான். பூக்களின் நிறங்கள் பல. பூஜை ஒன்றுதான். வழிபாடு செய்யும் முறைகள் பல. ஆனால் இறைவன் ஒருவன்தான்' என்கிருர் வேமனா.

வேமனா மக்கள் கவிஞராக கருதப்படுகிருர். அவர் சமுதாய மாற்றத்தை விரும்புபவர் என்பதை அவருடைய பாடல்கள் நமக்குக் காட்டுகின்றன. சமுதாயத்தில் நிலவிய மூடநம்பிக்கைகளை அவர் அறவே வெறுத்தார்.

'எல்லா உயிர்களும் சமம்' என்கிறது திருக்குறள். மனித இனத்தைப் படைத்தவன் பரம்பொருள். அப்படி இருக்கும்போது ஓர் இனத்தாரை உயர்ந்தவர் என்றும் மற்ருெரு இனத்தாரை தாழ்ந்தவர் என்றும் வேறுபடுத்துவது எப்படிப் பொருந்தும்? சாதி சமய வேறுபாடுகளை விட்டொழித்து விட்டு மனிதன் அனைவரும் 'ஓர் இனம்' என்னும் நிலையை அடைதல் வேண்டும்.

"அஞ்ஞானம் - அதாவது அறியாமை உள்ளவரை ஒருவன் சூத்திரன்தான். ஸுஜ்ஞானம் - அதாவது பிரம்ம ஞானம் வாய்க்கப் பெற்ருல் ஒருவன் பிரம்ம ஞானி ஆகிருன். வேடர் குலத்தில் பிறந்த வால்மீகி பிரம்மஞானம் வாய்க்கப் பெற்றதால் 'பிரம்ம ஞானி' என்று அழைக்கப்பட்டார்' என்கிருர் வேமனா.

கல்வியைப்பற்றி வேமனா கொண்டிருந்த சிந்தனை நடைமுறைக்கு ஏற்றதாகக் காணப்படுகிறது. பலர் தமது படிப்பிலேயே பாதி ஆயுட்காலத்தைக் கழித்து விடுவதைப் பார்க்கிரேம். படிப்பின் உட்பொருளை அறிய வேண்டியது முக்கியம். சிலர் சாத்திரங்கள் பல படித்துவிட்டு, ஆத்ம அனுபவத்தைப் பெற்றவர்களைப் போலத் திரிகிருர்கள். பேசியும் வருகிருர்கள். ஓவியமாக எழுதப்பட்ட விளக்கு எப்படி இருட்டைப் போக்கும்? அதுபோல்தான் ஏட்டுக் கல்வியும் என்கிருர் வேமனா.

கல்வியைப் பற்றிய சிந்தனையுடன் 'உண்மையான குரு' யார் என்னும் சிந்தனையும் அவரது மனதில் எழுகிறது.

நாயைத் தின்றவன் பரம குருநாதன். பன்றியைத் தின்றவன் பரமயோகி, யானையைத் தின்றவன் ஸுஜ்ஞானி என்ற கருத்துக்கள் நம்மைச் சிரிக்க வைக்கின்றன. ஆழ்ந்த பொருள் பொதிந்த கருத்து இது. நாய்க்கு வேலை இல்லை. நிற்க நேரமில்லை என்பார்களே. அந்தக் குறிக்கோள் இல்லாத குணத்தைக் கொன்றவன் பரம குருநாதன். பன்றியைப் போல் உருமும் குணத்தை விட்டவன் எவனோ அவனை பரமயோகி. யானை தன்னைப் போன்ற பெரிய விலங்கு வேறெதுவும் கிடையாது என்று நினைக்குமாம். அதைப்போலக் கர்வம் என்னும் குணத்தை விட்டவனே ஸுஜ்ஞானி எனப்படுவான்.

கல்வியில் ஆர்வமுள்ள மாணவன் நல்ல ஆசிரியரைத் தேடி அலைவது போலத்தான் கற்ற கல்வியை யாருக்குக் கற்பிக்கலாம் என்று தேடி அலைபவரே சிறந்த ஆசிரியர் என்கிருர் வேமனா.

'கற்பூரம் போலக் கடலுப்பிருந்தாலும் கற்பூரம் ஆமோ' என்பது ஒரு தமிழ்ப்பாடல். நல்லவர் - கெட்டவர் இவர்களை வெளித்தோற்றத்தால் எடை போடுவது மிகவும் கடினம். உப்பும் கற்பூரமும் தொலைவிலிருந்து பார்த்தால் ஒன்று போலவே காணப்படுகின்றன. ஆனால் அவற்றைப் பயன்படுத்தும் போதுதான் உண்மையான குணத்தை அறியமுடிகிறது. அதுபோல் மக்கள் இனத்திலும் அவரவர் செய்கையை வைத்தே நல்லவர் கெட்டவர் என்று தீர்மானிக்க வேண்டும்.

தங்கம் விலையுயர்ந்தது. தட்டினால் ஓசை வராது. வெண்கலமோ தங்கத்தைவிட விலை குறைந்தது. ஆனால் வெண்கலத்தினால்தான் ஓசை அதிகமாக வருகிறது. கங்கையாற்றை போன்ற புனித நதிகள் ஓசையில்லாமல் ஓடுகின்றன. ஆனால் அழுக்கு நிறைந்த சிற்ருேடைகள் இறைச்சலுடன் ஓடுகின்றன. மெத்த படித்த அறிஞர்கள் அமைதியாக இருக்கிருர்கள். அரைகுறை அறிவுள்ளவர்கள் சொற்களை வாரி இறைக்கிருர்கள்''. இந்தக் கருத்துகள் ஆடம்பரம் மிக்க இன்றைய சமுதாயத்திற்கு மிகவும் தேவைப்படுகிறது அல்லவா?

சூழ்நிலையைப் பற்றியும், மரபு நிலையைப் பற்றியும் உளவியல் அறிஞர்கள் பக்கம் பக்கமாக எழுதிக் குவித்திருக்கிருர்கள். நல்ல சூழ்நிலை ஒருவரின் மரபுக் குணங்களை மாற்றுமா என்னும் ஆராய்ச்சியும் நடந்த வண்ணம் உள்ளது. இதைப் பற்றி வேமனாவின் அணுகுமுறையைப் பார்ப்போம்.

எனுக தோலு தெச்சி ஏடாதி
உதிகினா
நலுபு நலுபே காணி தெலுபு காது

கொய்ய. பொம்மனி தெச்சி
கொட்டினா பல்குனா
விஸ்வதாபி ராம வினர வேமா"
என்பது பாடல்.

எலியின் தோலைக் கொண்டு வந்து ஓராண்டுக்காலம் கசக்கித் துவைத்தாலும் அதனை வெண்மையாக மாற்றமுடியுமா? மரப்பாவையை அடிமேல் அடி வைத்துப் பேசச் சொன்னாலும் அது பேசுமா? முடியாதல்லவா? அதுபோல்தான் மாற்ற முடியாத அம்சங்கள் பல உள்ளன. நாயின் வால் சுருண்டு விடும் தன்மையுள்ளது. அதை ஒருவர் இழுத்துப் பிடித்திருக்கும் வரை அது நிமிர்ந்திருக்கும். விட்டுவிட்டால் மீண்டும் சுருண்டு விடும்.

வலிமையில் குறைந்தவன் ஒருவன் அவன் தனக்குச் சாதகமான சூழ்நிலை அமையும் போது தன்னைவிட வலிமையானவனையும் வென்று விடுகிறுன். அதேபோல அதிகமான வலிமையுள்ள ஒருவன் தனக்குச் சாதகமான சூழ்நிலை அமையாத போது தன்னைவிட வலிமை குறைந்தவரிடம் தோல்வி அடைகிறுன்.

நீரில் இருக்கும் போது யானையையும் முதலை பிடித்து இழுக்கும். காரணம் முதலைக்கு வாய்த்த சூழ்நிலை. இது திருவள்ளுவர் தரும் செய்தி. இதே கருத்து வேமனாவின் பாடல் ஒன்றில் காணப்படுகிறது.

"நீள்ள லோனி முசலி நிகிடி
யேனுகுபட்டு
பைட குக்கது சேத பங்கபடுனு
ஸ்தான பலமு காணி தனபலமு
காதையா
விஸ்வதாபி ராம வினர வேமா"

நீரில் இருக்கும் போது யானையைப் பிடித்த முதலை கரைக்கு வந்ததும் அதுவே ஒரு நாயிடம் தோற்றுப்போகும். காரணம் இடப்பலம்தான் என்கிறுர் வேமனா.

தெய்வங்ககளைத் திருப்திப் படுத்துவதாக நினைத்துக் கொண்டு மக்கள் அப்பாவி விலங்குகளைப் பலியிடும் காட்சி மேமனாவின் மனதைப் புண்படுத்தியது. "வாழும் ஓர் உயிரைக் கொல்வது கடவுளையே கொல்வதற்கு ஒப்பாகும். ஜீவனும் சிவனும் ஒன்று. இதை உணருங்கள். கடவுள் எப்போதும் அன்பே வடிவமாக இருக்கிறுர். ஆகவே அன்பு வழியில் செல்லுங்கள். அப்போதுதான் இறைவனின் அன்பைப் பெறமுடியும்" என்கிறுர் வேமனா.

உண்மையை பேச வேண்டும் என்பது தரும சாத்திரங்கள் கூறும் உபதேசம். ஆனால் எப்போதும் உண்மை எடுபடுமா? உண்மை பேசும் ஒருவனுக்குத் துன்பங்கள் சவால் விடுகின்றன. தீயவர்களின முன்னிலையில் உண்மை பேசக்கூடாது. உண்மை பேசுபவர்களின் நடுவில்தான் நாமும் உண்மை பேச வேண்டும். அரிச்சந்திரன் உண்மையே பேசிப்புகழ் பெற்றுன் என்கிறுர் வேமனா.

ஒருவர் கோபம் கொள்வதால் பாதிக்கப்படுவர் அவரது பகைவர் மட்டும் அல்ல. கோபம் யாரிடமிருந்து பிறக்கிறதோ அவருக்கே அது தீங்கு பயக்கும் என்பது வள்ளுவர் வாக்கு. வேமனா 'மூக்கின் மேல் இருக்கும் கோபத்தால் காம, குரோத, லோப, மோக, மதம், மாச்சரியம் என்னும் ஆறு தீய குணங்கள் பிறக்கின்றன' என்று கூறுகிறுர். அந்தக் கோபம் முடிவில் எமனின் கைகளில் கொண்டு போய்ச் சேர்த்து விடுகிறது என்கிறுர் வேமனா.

'தீங்கு செய்பவர்களுக்கு நன்மை செய்யுங்கள். ஈனர், அழகிய பெண்கள், உத்தமர், ஞானியர் இவர்களிடம் சமயம் பார்த்துப் பேசுதல் வேண்டும்.'

"ஆத்ம சுத்தி இல்லாத ஆகாரங்கள், தூய்மையில்லாத பாத்திரத்தில் சமைக்கப்பட்ட உணவு, மனத்தூய்மை இல்லாத சிவவழிபாடு, இவற்றுல் ஒரு பயனும் இல்லை."

"அழகிய பெண்களையும், செல்வத்தையும் தமது கண்களால் காணும்போதும், சுவையான உணவைப் பற்றிப் பிறர் பேசும் போதும் யோகிகள் என்றுலும் மனத்தளர்ச்சி அடைவார்கள்" என்கிறுர் வேமனா.

ஏரியின் கரையை வளைவுகள் நீக்கி நிமிர்த்த முடியாதது போல, சிலரைத் திருத்த முயற்சி செய்வதும் வீண்.

"பகை தீர்ந்தால் கோபம் தீர்ந்திடும்
கோபம் தீர்ந்தால் கோரிக்கை
தீர்ந்திடும்
கோரிக்கை தீர்ந்தால்
பேதங்கள் தீர்ந்திடும்
இராஜஸம், தாமஸம், சாத்வீகம்
என்னும்
மூன்று குணங்கள் தீர்ந்தால்
முக்தி நிச்சயம்
என்கிறுர் வேமனா.

சிரிப்பையூட்டிச் சிந்திக்க வைப்பது என்பது எல்லாக் கவிஞர்களாலும் இயலாது. வேமனா இந்தக் கலையில் கைதேர்ந்தவராக விளங்குகிறுர்.

'பெரிய ஞானிகள் மக்கள் மத்தியில் வாழமாட்டார்கள் என்

றும், காடுகளில்தான் வாழ்வார்கள் என்றும் மக்கள் நினைத்து வருகிறார்கள். அப்படிப் பட்ட ஞானிகளை அவர்கள் மோட்ச உலகுக்கு வழிகாட்டுவார்கள் என்று நினைக்கிறார்கள். ஆனால் காட்டின் வழியே போகும்போது கொடிய விலங்கு ஒன்றை அவர்கள் சந்திக்கலாம். அது அவர்களின் மோட்ச உலகுக்கு வழி காட்டும்' என்கிறார் வேமனா.

கருமிகளிடமிருந்து காசைக் கறக்க முடியாது என்பதற்கு வேமனா வழிகாட்டும் உவமை வேறு எவரும் காட்டாத உவமையாகும். சில ஆடுகளின் கழுத்தில் பால் சுரக்கும் காம்புகளைப் போன்ற இரண்டு உறுப்புக்கள் காணப் படுகின்றன. ஆனால் அவற்றைக் கரந்தால் பால் சுரக்குமா? அதுபோல்தான் கருமிகளிடமிருந்து கருணையை எதிர் பார்ப்பதும். கருமி தேனியைப் போன்றவன். அவனது செல்வம் அவனுக்கே கூடப்பயன்படாது.

வெளித் தோற்றத்தைப் பொருத்தவரை அத்திப்பழம் அழகானதுதான். ஆனால் அதற்குள்ளே புழுக்கள் நிறைந்திருக்கும். கோழை அத்திப்பழம் போன்றவன். வாய் வார்த்தைகளால் வீரம்பேசுவான். பிரச்சினைகளைச் சமாளிக்க வேண்டிய நேரத்தில் ஓடி ஒளிந்து கொள்வான்.

வேமனா பெண்களை இழிவு படுத்திப் பாடியிருப்பதாகச் சிலர் கருதக்கூடும். அவருடைய தாக்குதல்கள் எல்லாம் விலைமாதரையும் அவர்களின் காமத்தீயில் விழும் ஆண்களைப்பற்றியுமே. குடும்பப்பெண்களை இழிவு படுத்தியதாகப் பாடல்கள் இல்லை. யாரையும் துறவு போகும்படித் தூண்டவில்லை அவர். பெண்களைப் போகப் பொருளாக நினைத்து நாட்களை வீணாக்க வேண்டாம். மனிதனுக்கு வேறு கடமைகளும் உள்ளன என்று நினைவூட்டி நல்வழி காட்டியவர் யோகி வேமனா. பிறவியிலேயே அவர் யோக ஆகிவிடவில்லை. இல்லறத்தில் வாழ்ந்து பெற்ற அனுபவங்கள் அவரது பாடல்களில் காணப்படுகின்றன.



| | | | |
|---|---|---|---|
| (1) | ஆழ்வார்கள் பதின்மர், ஆண்டாள் ஆகிய பதினோருவரும் மங்களா சாஸனம் செய்த தலம் (திருவரங்கம்) | | 1 |
| (2) | தொண்டரடிபொடியாழ்வார் தவிர, மற்றவர்கள் மங்களாசாஸனம் செய்த தலம் (திருவேங்கடம், திருபாற்கடல்) | | 2 |
| (3) | எண்மர் மங்களாசாஸனம் செய்த தலம் (பரமபதம்) | - | 1 |
| (4) | எழுவர் மங்களாசாஸனம் செய்த தலம் (திருக்குடந்தை) | | 1 |
| (5) | அறுவர் மங்களாசாஸனம் செய்த தலம் (திருமாலிருஞ்சோலை) | | 1 |
| (6) | ஐவர் மங்களாசாஸனம் செய்த தலங்கள் | - | 6 |
| (7) | நால்வர் மங்களாசாஸனம் செய்த தலங்கள் | - | 3 |
| (8) | மூவர் மங்களாசாஸனம் செய்த தலங்கள் | - | 5 |
| (9) | இருவர் மங்களாசாஸனம் செய்த தலங்கள் | - | 21 |
| (10) | ஒருவர் மங்களாசாஸனம் செய்த தலங்கள் | - | 67 |
| | ஆகமொத்த தலங்கள் | - | 108 |

திரு. என்.சி. கோபாலன் - சென்னை.

## திருமலையில் சேவை சாதிக்கும் சிலைகள் (பேரங்கள்) ஐந்து

1) த்ரோ பேரம்: மூலவர்: திருவேங்கடமுடையான்.
2) கௌதுக பேரம்: வெளியே எழுந்தருளாத உலோகச்சிலை.
3) உற்சவர்: மலையப்பர், (தும்புரு தீர்த்தத்தில் இருந்தவர்)
4) ஸ்நபன பேரம்: ஸ்நானச்சிலை. இச்சிலைக்கே அபிஷேகங்கள் நடைபெறும்.
5) சயன பேரம்: போக ஸ்ரீநிவாசர் (பள்ளியறையில் எழுந்தருள்பவர்.)

குறிப்பு : பண்டைக்காலத்தில் உக்ர ஸ்ரீநிவாசரே உற்சவராக இருந்தார். உக்ர ஸ்ரீநிவாசர் துவாதசியன்று ஒருநாள் மட்டுமே எழுந்தருள்வார்.

**மண்டபங்கள் :** துவாரபாலகர் மண்டபம் சோழ அரசன் ஒருவனால் கட்டப்பட்டது. பின்னர் முகமண்டபம், புஷ்ப மண்டபம், போக மண்டபம், ராச மண்டபம் எனப் பல மண்டபங்கள் கட்டப்பட்டன.

**மணிஓசைச் சிறப்பு :** திருமலைக்கோவில் மணி ஒலிக்கும் ஓசை சந்திரகிரியில் கேட்குமாம். இவ்வோசையைக் கேட்ட பின்னரே மன்னர் கிருஷ்ண தேவராயர் உண்பாராம்! இவர் காலத்திலிருந்தே திருமலைக்குப் பெருஞ்சிறப்பு ஏற்பட்டதாம்!

'சதயன்' - காஞ்சிபுரம்.

(தொடர் கட்டுரை)

# பகவத் கீதை

## பத்தாம் அத்தியாம் - விபூதி யோகம்

உமைப்ரியன்

ம்ருத்யு: ஸர்வஹரஸ் சாஹம்
உத்பவஸ்ச பவிஷ்யதாம் ।
கீர்த்தி: ஸ்ரீர்வாக்ச நாரீணாம்
ஸ்ம்ருதிர்மேதா த்ருதி: க்ஷமா ॥
(34)

"எல்லாவற்றையும் அழித்திடும் மரணம் நான். செல்வந்தர்களிடத்து நான் வளரும் செல்வமாகத் திகழ்கின்றேன். பெண்மைகளுள் புகழ், அழகு, சொல், நினைவு, அறிவு, திண்மை மற்றும் பொறுமை என்று விளங்குகிறேன்."

[தோற்றம், இருப்பு, மறைப்பு யாவும் அவ் இறைவனிடையே நடக்கின்றன. தோன்றிய யாவும் இறப்பது உறுதி. இந்த 'இறப்பு' பிறப்பைவிட முக்யமானது. எல்லா உயிர்களும் தான் பிறக்கின்றன. ஆனால் மானிடப்பிறப்பு, அவனை மேம்படுத்திக்கொள்ளவே நிகழ்கின்றது. இறந்தோர் பின் செல்லும் கூட்டத்தைப் பொறுத்து இறந்தவனின் புகழ், பெயர் பேசப்பெறும். ஆகவே பெருமை தரும் அம்மரணமாக இறைவன் விளங்குகின்றான். இப்பெருமையும் இறைமைப்பண்புகளால் மட்டுமே பெறமுடியும்.



நிறைந்த குடத்தில் நீர் தங்காது போன்று செல்வந்தரிடம் மேலும் செல்வம் சேரும் போது அது பிறர்க்குப் பயன்படவும் செய்கின்றது. செல்வம் திருமகளின் இருப்பிடமாக அமைவதால், அந்த வளரும் செல்வமாக மாயவன் திகழ்கின்றான். திருமகளின் திருக்குணங்களே பெண்மையின் பெருமை பேசும். ஒருவனுக்குச் சொல்லும் செயலும் தூய்மையானதாக அமையுமானால் புகழ் அவனைத் தேடி வரும். திரு என்றால் அழகு என்று பொருள். பெண்மைக்குச் சிறப்புதருபவற்றுள் உருவமைதியும் அழகு சேரக்கும். மிதமானதும், கருத்துள்ளதுமாகிய சொற்கள் வலிமையுடையதாக அமையும். எனவே சொல் வன்மையும் இறைவனின் திருவருளாலேதான் கிடைக்கப்பெறும். யானை உள்ளிட்ட சில உயிர் இனங்களுக்கு நினைவாற்றல் உண்டு. ஆனால் இந் நினைவு ஆற்றல் ஒரு சில குறிப்பிட்ட காலத்திற்குள் மறையலாம். மேலும் இடம் மாறும் போது நினைவுகளும் மறந்துவிடும். ஆனால் இதற்கு விதிவிலக்காக மனிதன் விளங்குகின்றான். சிறந்த நினைவாற்றல் உடையவர் மகானாகப் போற்றப்படுவர். எழுதாக் கிளவியான 'வேதம்' மனிதரின் நினைவாற்றல் திறமையால்தான்

இன்றுவரை நம்மிடையே போற்றப்பட்டு வருகின்றது. இது இறைச் சக்தியின் மகிமையால் தான் நாம் பெறமுடியும். பகுத்தறிவும் உயர்பண்பான அறிவானது மனிதர்களுக்கே உரிய தனிச்சிறப்பு, அறிவு மேம்படுவது மனிதனின் சொந்த முயற்சி என்றாலும் அம்முயற்சி வெற்றி பெறுவது இறைவனின் திருவருளால்தான். பிரச்சனைகளும், துன்பங்களும் மனிதனைச் சூழும்போது அவன் பொறுமை, கோபம் எனும் உணர்வுகளுக்கு ஆளாகாமல் பொறுமையுடன் திகழும்போது அவன் உயருகின்றான். 'பொறுத்தார் பூமியாழ்வார்' என்பதற்கிணங்க மனிதர்க்குப் பெருமை சேர்ப்பது பொறுமையாகும். இவையாவும் குடிகொண்டுள்ள திருமகளின் பெண்மைப் பண்புகள் மனிதருள் அமைந்தால் நரகம் சொர்க்கமாகும்.]

*ப்ருஹத்ஸாம ததாஸாம்னாம்*
*காயத்ரீ சந்தஸாமஹம் ।*
*மாஸானாம் மார்கசீர்ஷோ அஹம்*
*ருதூனாம் குஸுமாகர: ।। (35)*

"மேலும் நான் சாம வேதத்தில் பிருஹத் சாமமாகவும், சந்தங்களில் காயத்ரியாகவும், மாதங்களில் மார்கழியாகவும், பருவங்களில் வஸந்த காலமாகவும் விளங்குகின்றேன்."

[முன்பொரு கீதை ஸ்லோகத்தில் நான்கு வேதங்களில் தான் சாம வேதமாக இருக்கின்றேன் என்று பகவான் கூறியுள்ளார். அந்த சாம வேதத்திலும் அதில் ஒரு பிரிவான ப்ருஹத் சாமமாகதான் இருப்பதாக இங்குக் கூறுகின்றார். இசைச் சிறப்பு பெற்றது சாம வேதம். அதில் பருஹத் சாமம் இசைப்பெருமை மட்டுமின்றி, பொருட் செறிவும் மிக்கு விளங்குவது. செய்யுளுக்கு அழகு சேர்ப்பது சந்தம் எனும் இலக்கணம். இவ்வாறு இலக்கணச் சிறப்பும், தெய்வ வழிபாட்டிற்குரிய பெருமையும் கொண்டு காயத்ரி விளங்குவதால் தான் அக்காயத்ரியாக இருப்பதாக கண்ணன் கூறுகின்றான். அதிக குளிரும், அதிக வெப்பமும் இல்லாது மிதமான சீதோஷ்ண நிலை கொண்ட மாதமாகத் திகழ்வது மார்கழி மாதமாகும். மார்கழி மாதத்து விடியற்காலைப் பொழுது 'பிரம்ம முகூர்த்தம்' எனும் சிறப்புடையது. இப்பொழுதானது இறைவழிபாடு, மனக்கட்டுப்பாடு, மனயைமைதி ஆகியவற்றிற்கான சிறந்த சூழ்நிலையாகும். அத்தகுப் பெருமைமிகு மாதமான மார்கழியாக தான் இருப்பதாக இறைவன் கூறுகின்றான். பனிக்காலத்தைத் தொடர்ந்து விளங்குவது இளவேனிற்காலம். இக்காலத்தில் மரங்களும் செடிகளும் தளிர்விட்டுப் புதிய இலைகளுடன் புத்தொளியுடன் விளங்கிடும். புத்துணர்வுடன் கூடிய ஓர் புதிய சூழ்நிலை உருவாக்கிடும் இந்த இளவேனிற் காலமாக பகவான் இருக்கின்றானாம்.]

*த்யூதம் சலயதாமஸ்மி தேஜஸ்*
*தேஜஸ் வினா மஹம் ।*
*ஜயோ அஸ்மி வ்யவஸாயோ அஸ்மி*
*ஸத்வம் ஸத்வவதாமஹம் ।। (36)*

"தீயோர் விளையாடும் சூதாட்டமாகவும், ஒளி பொருந்தியோரின் ஒளியாகவும், வெற்றியாகவும், முயற்சியாகவும், நல்லோரின் சத்துவ குணமாகவும் நான் விளங்குகின்றேன்."

[சூதாட்டம் என்பது வஞ்சிக்கும் விளையாட்டுக்களில் ஒன்றாகும். ஆனால் சூதாட்டம் இவற்றில் ஒரு சிறிது வேறுபட்டு விளங்குகிறது. குதிரைப் பந்தயம் கூட ஒருவகை சூதாட்டமேயாகும். ஆனால் அங்கு வெற்றியானது குதிரை ஓட்டுபவர் மீது மட்டுமின்றி, குதிரையின் மீதும் ஆதாரப்பட்டுள்ளது. வஞ்சித்தல் என்பது பிறருடைய ஏமாற்றத்தால் நிகழ்வது. ஆனால் சூதாட்டத்தின் வெற்றி அதை ஆடுபவரின் அறிவுத்திறத்தைப் பொறுத்து அமைகின்றது. இந்தத் திறமையும்கூட அவ் இறையருளால்தான் ஒருவனுக்குக் கிடைத்திட வேண்டும். இவ் அறிவுத்திறத்தை சூதாட்டத்திற்குச் செலவழிக்காமல், நன்மை பயப்பனவற்றிற்குச் செலுத்திடும் போது, அவன் மனிதருள் மகானாக அழைக்கப்படுவான். இங்கு 'தேஜஸ்வி' என்பது ஆற்றல் உடையவராவர். ஆற்றல் என்பது ஒருவனிடம் அழகு, அறிவு, மனக்கட்டுப்பாடு, உடல்நலம் ஆகியன ஒன்று சேரும்போது கிடைக்கக் கூடிய பேறாகும். அத்தகையோரிடம் 'ஆற்றல்வொளி' (ஆற்றல் வெளிப்பாடு) விசிட, அதுவே மற்றவர்க்கு ஒரு வழிகாட்டியாக, பின்பற்றிடும் பாதையாக அமைந்திடுமாம். இதனை ஆசார்ய புருஷர்கள் ராமகிருஷ்ணர், விவேகானந்தர், மகாத்மா காந்தி ஆகியோரிடம் விளங்கவே செய்தது, இத்தகு ஆற்றலாக, 'ஆற்றல்வொளி' யாக பகவான் திகழ்கின்றானாம். முயற்சியின்றி எந்தச் செயலும் முழுமைபெறாது. வெற்றியை அளிக்காது. முயற்சியே இன்றைய மெய்ஞான, விஞ்ஞான வளர்ச்சிக்கு அடிப்படை தேவையாகும். முயற்சி செய்திருக்காவிட்டால், நமது சமயத் தலைவர்கள் நமக்கு இறை உண்மையை உணர்த்தியிருக்க மாட்டார்கள். முயற்சியில்

லாது இருந்தால் நாம் இன்றைய விஞ்ஞான வளர்ச்சியின் பயனை அனுபவித்துக்கொண்டிருக்கமாட்டோம். ஆம், ஆனறோரின் 'முயற்சி' இல்லாதிருந்தால் இன்றும் நாம் 'இருண்ட' காலத்திலேயே உழன்று கொண்டிருந்திருப்போம். மனிதனிடம் உள்ள மூன்று குணங்களில் (ரஜோ, தமோ, சத்துவ) சத்துவ குணமே ஒருவனை உள்ளத்தாலும், உடலாலும் பண்படுத்துகின்றது. பிறருக்குப் பயன்படும் வகையில் ஒருவனை உயர்த்துகின்றது. அத்தகு பெருமை மிகு சத்துவ குணமாக இறைவன் நம்முள் இருந்து நம் பிறப்புக்குப் புகழ் சேர்க்கின்றான்.]

வ்ருஷ்ணீனாம் வாஸுதேவோ அஸ்மி
பாண்டவானாம் தனஞ்ஜய: ।
மூனீனாமப்யஹம் வ்யாஸ:
கவீனாமுசனா கவி: ।। (37)

"விருஷ்ணிகளுள் வாசுதேவனாகவும், பாண்டவர்களுள் தனஞ்ஜயனாகவும், முனிவர்களுள் வியாசராகவும், கவிகளுள் சுக்கிரனாகவும் நான் (இருக்கின்றேன்) யாதவர் குலத்திற்கு விருஷ்ணிகள் என்று பெயர். அத்தகு குலத்தைச் சார்ந்த வசுதேவரின் புதல்வராக பகவான் இருப்பதால் அவருக்கு வாசுதேவன என்று பெயர். ஆதலால் அக்குலத்திற்கு நாயகனாக இறைவன் திகழ்கின்றான். பாண்டவர்களுள் தன்னை தனஞ்ஜயன் என்றழைக்கப்படும் அர்ச்சுனனாகத் தன்னைக் கூறிக்கொள்கிறார். தனஞ்ஜெயன் என்றால் செல்வத்தை வென்றவன், செல்வநாயகன் என்று பெயர். அதாவது மற்றைய அரசர்களிடமிருந்து மிக்கு உள்ள செல்வத்தைப் போரிட்டுக்கொண்டு வந்து, அதனை நல்லவற்றிற்குப் பயன்படுத்தியதால் அர்ச்சுனனுக்கு அப்பெயர் வந்தது. மேலும் தன்னை அர்ச்சுனனாகக் கூறிக்கொண்டது அவனிடம் பகவான் கொண்டிருந்த தோழமை உறவினைப் புலப்படுத்துவதாகும். மற்றொரு காரணமும் உண்டு. அர்ச்சுனன் தன் செயல்களுக்கு, வெற்றிகளுக்குத் தான்தான் காரணம் என்று நினைத்திருந்தான். ஆனால் பகவான்தான் அவனுள் இருந்து முதற்காரணமாக விளங்குகின்றான். அதனை அவனுக்கு நினைவூட்டவே, தன் கிருபையால் அவன் செயல்படுவதை விளக்கிடவே தான் அர்ச்சுனனாக இருப்பதாகக் கூறுகிறார். அடுத்து தன்னை முனிவர்களுள் வியாசராக இருப்பதாகக் கூறிப்பெருமைப் படுகிறார். முனிவர் என்றால் எல்லாம் தெரிந்தவர், இறைவனை அறிந்தவர் என்று பொருளாம். இங்கு வியாசபகவான் முனிவர்களுள் முதலிடம் பெறுகிறார். அதாவது, வேதங்களைத் தொகுத்ததும், வேதாந்த சூத்திரங்களை பகுத்ததும், மகாபாரதம் மற்றும் பல புராணங்களை எழுதியதும் அவர்தம் பக்தி, ஞானம் போன்றவற்றைப் படம் பிடித்துக் காட்டுவனவாகும். வியாசர் இறையருள் முழுமையாகக் கொண்டதனால்தான் அவர்தம் சிறப்பு தெரியலாயிற்று. அத்தகு பெருமைமிகு வியாசராக தான் இருப்பதாகப் பகவான் கூறுகிறார். அடுத்தது கவிகளுள் சுக்கிரனாகத்தான் இருப்பதாகக் கூறுகிறார். உலக அறிவு, ஞான அறிவு மிக்கோர் கவிகளாவர். அத்தகையோரில் சிறந்தவராக உசனா என்றழைக்கப்படும் சுக்கிரன் விளங்குகின்றார்.]

"தண்டோ தமயதாமஸ்மி நீதிரஸ்மி
ஜிகீஷதாம் ।
மௌனம் சைவாஸ்மி குஹ்யானாம்
ஞானம் ஞானவதா மஹம் ।। (38)

"தண்டனை தருபவர்களிடத்து (விளங்கும்) செங்கோலாகவும், வெற்றி வேண்டுவோரிடத்து (விளங்கும்) நீதியாகவும், ரகசியங்களுள் மௌனமாகவும், ஞானிகளிடத்து (விளங்கும்) பேரறிவாகவும் நான் (இருக்கின்றேன்.)

"(கொலையே செய்யாதவனுக்குக் கொலைக்குற்றம் சுமத்தித் தண்டனை வழங்கினால் நீதியின் மீதும், நீதிபதியின் மீதும், சமுதாயத்தின் மீதும் ஒருவனுக்குக் கோபம், வெறுப்பு ஏற்படும். அதேபோன்று கொலை செய்த குற்றவாளிக்குத் தகுந்த சாட்சியங்கள் இல்லை என்று கூறிக் குறைந்த தண்டனைக் கொடுத்திடும் போது சமுதாயமும், பாதிக்கப்பட்டவரும் நீதியை, நீதிபதியை குறைகூறுவர். ஆகவே தண்டனை மறந்தாலும், குறைந்தாலும், அதிகமானாலும் (நீதியே) நீதிபதியே இறுதியில் விமர்சிக்கப் படுகிறார். குற்றத்திற்குரிய தண்டனை விதித்திடும்போது, குற்றவாளிகூட அத்தண்டனையை ஏற்றுக்கொள்ளக்கூடியதாக மதிக்கின்றான். செய்த குற்றத்திற்காக நொந்து கொள்கிறான். அதனால் தன்னை சீர் திருத்திக்கொள்கிறான." இங்கு நீதிபதியின் செங்கோலாக நீதி அமைகின்றது. அதுவே நீதிபதிக்குச் சிறப்பு சேர்க்கின்றது. துலாக்கோலாக - செங்கோலாக இறைவன் திகழ்கின்றானாம். நீதியின் உயரவைப் பொறுத்தே வெற்றியின் சிறப்பு பேசப்பெறும். குறுக்கு வழியில் பெறப்படும் வெற்றி நிரந்தரமான அமைதியைத் தராது. பிரச்சனைகளை ஏற்படுத்தாது. அத்தகு நீதியாக இறைவன் அமைகின்றான். இரகசியங்களுள் தான் மௌனமாக இருப்ப

தாகக்கூறி, மௌனத்தின் பெருமையை, ஆற்றலை பகவான் வெளிப்படுத்துகிருர். ஒரு விஷயம் வெளியே தெரிந்துவிட்டால் அது ஓசையாகி விடுகிறது. அதனையே இரகசியமாக வைத்திருந்தால் அதன் மதிப்பு உயருகிறது. இது மௌனத்தால் மட்டுமே காக்க முடியும். அசையும் பொருட்களால் மௌனம் சாதிக்கமுடியாது. உடல் அசையாது இருப்பதைவிட, மனம் - உள்ளம் அசையாது இருந்தால் மனக் கட்டுப்பாடுடன் இருந்தால் - உள்ளே இறைவனைக் காண முடியும். அதாவது நம் ஆத்மாவை நாம் அறிய முடியும். அறிந்தால் அதில் உறையும் ஆத்மநாதனை கண்டு இன்புறலாம். இதுவே மௌனத்தின் ஆற்றல். அறிவு, அறிபவன், அறியப்படும் பொருள் தனித்தனியாகச் செயல்படும் போது, உலகாயுத விஷயங்களே மனிதனைச் சுற்றித் திகழும். அப்போது வாழ்க்கையின் பயனான பகவானை - இறை உண்மையை அறிய முடியாது. அறிந்துகொள்பவனாகிய மனிதனிடம் உள்ள அறிவை அவன் அறிந்துகொண்டால், அந்த இறைவனைக் கண்டிட முடியும். மனிதன் பிறக்கும் போது அறிவுடன்தான் பிறக்கின்ருன். அதாவது இறைக் குணங்களோடு தான் பிறக்கின்ருன். அதாவது இறைவன் தன்னைக் கொடுத்து தன்னைக் காண்பித்துக்கொள்கிருன். ஆகவே அந்த அறிவே இறைப்பண்பாகும்.]

**யச்சாபி ஸர்வபூதானாம் பீஜம்**
**ததஹமர்ஜுன ।**
**ந ததஸ்தி விநா யத்ஸ்யான்**
**மயா பூதம் சராசரம் ।। (39)**

"அர்ச்சுனா! ஐம்பூதங்களுக்கும் காரணம் நானே! இந்த உலகத்தில் உள்ள எல்லா நகரும் மற்றும் நகரா உயிர்களில் நான் கலந்து வாழ்கின்றேன்."

[உயிர்களின் தோற்றத்திற்குக் காரணமான ஐம்பூதங்களிடத்தும் கலந்து இருப்பவன் இறைவன். மேலும் ஆறறிவு வரை உள்ள உயிர்களினுள்ளும் செடி, கொடி போன்ற நகரா உயிர்களிடத்துள்ளும் ஆத்மாவாக இறைவன் திகழ்கின்ருன். அவை யாவும் இறையம்சங்களேயாம் என்று பகவான் உறுதிப்பட விளக்குகின்ருர்.]

**நாந்தோ அஸ்திமம திவ்யானாம்**
**விபூதீனாம் பரந்தப ।**
**ஏஷ தூத்தேசத: ப்ரோக்தோ**
**விபூதேர் விஸ்தரோ மயா ।। (40)**

"எதிரிகளை அலை கழிப்பவனே! என்னுடைய ஆற்றல்களுக்கு முடிவு என்பது ஒன்று இல்லை. எனது ஆற்றல்களின் ஒரு சிறிது மட்டுமே இங்கு என்னால் கூறப்பட்டது."

[இதனால் பகவானால் கூறப்பட்ட அவர்தம் ஆற்றல்களை அறிந்தவர், அதனால் பெறப்பட்ட ஞானத்தினால் மேலும் பரந்து கிடக்கும் இறைவனின் மற்றைய ஆற்றல்களை சுயானுபவமாக அறிதல் அவசியமாகிறது என்பது பெறப்படுகிறது.]

**யத்யத் விபூதிமத்ஸத்வம்**
**ஸ்ரீமதூர்ஜிதமேவ வா! ।**
**தத்த தேவாவகச்ச த்வம் மம**
**தேஜோம்சஸம்பவம் ।। (41)**

"எவையெல்லாம் மகிமை, ஆற்றல், அழகுடன் திகழ்கின்றனவோ, அவையாவும் என்னுடைய ஆற்றலின் ஒரு பகுதியின் வெளிப்பாடே என்பதை அறிவாயாக!"

[ஒருவனுடைய உள்ளத்தைக் கவரும் மற்றவர்களுடைய, மற்றவற்றின் எந்த அழகும், எந்தச் செயலும், எந்த ஓசையும் இறைவனின் அருளால்தான் வெளிப்படுகின்றன. அதாவது அவை யாவும் இறைவனின் பிரதிநிதி வெளிப்பாடுகளேயாம்.]

**அதவா பஹுனைதேன கிம்**
**ஞாதேன தவார்ஜுன ।**
**விஷ்டப்யாஹமிதம் க்ருத்ஸ்னம்**
**ஏகாம்சேன ஸ்திதோ ஜகத் ।। (42)**

"அர்ச்சுனா, இதனைப் பலவகையாக (என்னுடைய ஆற்றலை) விவாதிப்பதில் பயன் என்ன உனக்குக் கிடைக்கப் போகிறது? என்னுடைய ஆற்றலின் ஒரு பகுதியால் மட்டுமே இந்த உலகனைத்தையும் இயக்கிக் கொண்டிருக்கின்றேன்."

[இந்தச் செய்யுளின் மூலம் தன் பரந்த ஆற்றலை சொல்லாமல் விளக்குகின்ருர். அந்தப் பரம்பொருளை நேரில் கண்டுணரும் போதுதான் அவர்தம் முழு ஆற்றலை அறிய முடியும். அதாவது அவர்தம் ஆற்றலை அவரால் மட்டுமே அறியமுடியும்.]

## பத்தாம் அத்தியாயம் முற்றும்.

(தொடரும்)



# நாவில் நடமாடும் நான்முகன்

திரு. ர: வேங்கடரத்தினம் - பெங்களூர்.

சிவன், பிரம்மா, விஷ்ணு என்போர் நம் மூம்மூர்த்திகள் ஆகிய தெய்வங்கள். இவர்களில் சிவபெருமானுக்கும் திருமாலுக்கும் பெரிய அடியார் பட்டாளங்கள் உள்ளன. நிறைய‌த் திருக்கோயில்கள் இவ்விருவர்க்கும் உண்டு. வழிபாடுகள் ஏராளம் இவர்க்கு மட்டுமே காண்கிறோம். பிரம்மதேவனுக்கும் ஆரவாரமான வழிபாடோ கோயிலோ இருப்பதாகத் தெரியவில்லை. எங்காவது சிவபெருமானுடனும் மஹாவிஷ்ணுவுடனும் பிரம்மா கண்ணில் பட்டார் என்றால் அந்த இடங்களைத் திரிமூர்த்தி ஸ்தலம் எனக் கொண்டாடுவோம். எங்கெல்லாம் கூட முதலிடம் சிவவிஷ்ணுவுக்கே பிரம்மதேவன் இருக்கிற இடம் தெரியாமல் இருந்துவிட்டுப்போவார். உதாரணம் சிதம்பரம். அங்கே நடராஜர் - கோவிந்தராஜர் ஆட்டிப்படைப்பவர்கள். பிரம்மா எங்கே வந்தார் என்றால், பிரம்ம சண்டிகேசுவரர் என்பதாக இருவரும் ஒரு சிறு கோயிலுள் இருப்பார்கள்.

இவ்வளவெல்லாம் கூறினும், பிரம்மாவிற்கு நம்மிடையே நம் மறியாமலேயே வழி வழி வந்துள்ள தனி ஸ்தானத்தை யாரும் மறக்க முடியாது பிரம்மா படைப்புத்தெய்வம். காத்தல் - அழித்தல் என்னும் இரு பணிகளுக்குமே மூலம் படைப்புத்தொழில்தான்.

அவரை நாம் பிரம்மாதமாக வழிபடுவது இல்லை ஆயினும், அவரை நாம் நம் அன்றாட வாழ்க்கையில் பெரிதும் நினைவிற்கொண்டு, வாய்க்கு வாய் அவரைப்பறறி நிறையப்பேசுகிறோம். சிவ சிவ எனறோ அல்லது ராம ராம என்றோ நாம தியானம் செய்கிறுப்போல், பிரம்மாவை வழிபாட்டுககுரிய தெய்வமாக நாம் ஆக்கிக்கொள்ளாமல் இருக்கலாம். ஆனால் அவ்விருவர்ககும் இல்லாத தனியிடத்தை நாம் பிரம்மாவிற்கு வழங்கி நாளதோறும், பொழுதெல்லாம் எங்கெங்கோ அவரை நினைவு கூர்கிறோம்.

எந்த ஊரில் எந்தக் கோயிலில் உள்ள எந்த தெய்வத்திற்கு வருடாந்தரத திருவிழா நடந்தாலும், அவற்றிற்கெல்லாம் பொதுவான பெயர் என்ன தெரியுமா? சிவன் கோயிலானாலும் சரி, பெருமாள் கோயிலானாலும் சரி. பிரம்மோற்சவம் என்று தான் சொல்கிறோம். திருப்பதியில் பிரம்மோற்சவம் மூன்று வருடத்திற்கு ஒருமுறை இருமுறை வருவதுண்டு என்போம். கும்பகோணத்தில் மாசி மாதத்தின் போது பிரம்மோறசவம் நடைபெறும் என்கிறோம். விழா நாயகர் சிவன, விஷ்ணு அல்லது முருகவேள், இல்லையேல் மாரியம்மனாக இருக்கலாம். எல்லாவற்றிற்கும் பொதுப்பெயர் இந்த பிரம்மோற்சவம் என்பது.

அதிகாலையெழுந்து பள்ளி மாணவர் பரீட்சைக்குப் படித்துத தம்மைத் தயார் ஆக்கிக்கொள்வதைப் பார்க்கிறோம். இசைக்கலைஞர்கள் வைகறை யெழுந்து, அகார ஸாதக மெல்லாம் செய்து குரலுக்கு மெருகேற்றிப் பயிற்சி செய்வர். வேத பாடசாலையில் அத்யயனம் நடைபெறும் ஏன், குடுகுடுப்பாணடிகள் நடத்தும் தொழிலுக்கு ஏற்ற தகுதி பெற உழைத்து உருவேற்றும் நேரம் அது. யோக ஸாதனைக்கு ஏற்ற நேரம். அநதப் போது தான். நடை, வேகநடை, ஓட்டமெல்லாம் செய்து விளையாட்டு வீரர்கள் பயிறசி செய்யும் அந்த விடியலுக்கு முந்திய வேளையில் இன்று பெரிதாகப் பேசப் பெறும் ஓஸோன் எனும் வீரிய பிராணவாயு காற்று மண்டலத்தில் நிறைந்து நிற்கும். அது தான் பிரம்ம முஹூர்த்தம.

பிரம்மவித்யை என்பது மிக உயரிய ஞானத்துறைக்குப் பெயர். பரம்பொருளுக்கும் பல்லுயிர்க்கும் உரிய உறவை ஆய்ந்து கூறும் ஞான மார்க்கத்தின் முடிவு பிரம்மவிதியை பெறுவதே. நம் உபநிஷததுக்களுக்கு ஒரு பெயர் பிரமம வித்யை.

இத்திருப்பெயரைத் தாங்கிய தேவி, சிவத்தலம் ஒன்றில இருக்கிறா. திருவெணகாடு க்ஷேத்திரத்து அம்பிகையின் பெயர் பிரம்மவித்யாம்பாள் ஞானாம்பிகை, ஞானப் பூங்கோதை என்ற திருநாமங்கள் கொண்ட அம்பாள் வேறு இடங்களில் எழுந்தருளியுள்ளது நாம் அறிவோம். அப்பெயர்க

ளுக்கெல்லாம் விளக்கம் போன்றது இந்த பிரம்மவித்யா எனும் பெயர்.

பிரம்மம் என்ற சொல்லில் உயர்தர அறிவோடு அடிப்படை ஒழுக்கமும் அடக்கம் என்பதை நாம் வேறொரிடத்தில் காணலாம். பண்பையும் படிப்பையும் வளர்த்தற்குரிய அந்த மாணவப் பருவத்திற்கு பிரம்மசரியம் என்பது நம்முன்னோர் வழங்கிய பெயர். நான்கு நிலைகள் எனும் ஆசிரமங்களில் அதுவே முதலும் முதன்மையும் ஆனது.

மாணவப்பருவத்தில் காயத்ரி மந்திரம் உபதேசிக்கப்பெறுவது ஒரு முக்கிய நிகழ்ச்சி; அரிய சடங்கும் ஆகும். அந்த உபநயன விழாவிற்கு உரிய பெயர் காயத்ரி மந்திரோபதேசம் என்று எவரும் சொல்வதில்லை. பிரம்மோபதேச முஹூர்த்தம் என்று அதைக்கூறுவர்.

உபநிஷத்துக்களின் மூலக்கருத்துக்களைக் கூறும் முக்கிய வாசகத்திற்கு மஹாவாக்கியம் என்பர். இவ்வாறு சிறப்பாகப் பேசப்பெறும் முக்கிய வாக்கியங்கள் நான்கு உண்டு. ஒவ்வொன்றும் ஒவ்வொரு வேதத்தின் பிழிவு அல்லது பொருள் திரட்டு எனலாம். அவற்றில் தத்வமஸி என்பது மட்டும் தனித்து நிற்கிறது. மற்றைய மூன்றிலும் பிரம்மம் அடிநாதமாகக் குரல் கொடுக்கிறது. உபநிஷத்துக்கள் பிரம்மத்தை நாடித்தேடி நிலை நாட்டும் ஞானக்கருவூலங்கள் எனக்கூறப்படுவது அதனால்தான் பிரம்மத்தை அறிந்தவன் ஞானியரில் சிறந்தவன்; உயர்ந்தவன். பிரம்ம ஞானி என்பர் அவர்களை,

ரிஷிகளில் கூட பிரம்மரிஷி என்பவரே மிக உயர்நிலையில் உள்ளவர். இந்த பிரம்மரிஷிப் பட்டத்திற்காக விசுவாமித்திர முனிவர் அல்லற்பட்டதெல்லாம் தனிக்கதை. அதுவும் வசிஷ்டர் வாயால் பிரம்மரிஷி எனப்போற்றப்படுவது ஒரு பழமொழியாகவே ஆகிவிட்டது.

வியாச பகவான் திரட்டித் தந்த சூத்ரநூல் 'ப்ரஹ்ம ஸூத்ரம்' எனப்படும். நம் வேதாந்த தரிசனத்திற்கு இதுதான் குறிப்புரை. கையேடு இரண்டுமே. இதற்குத்தான் நம் பழைய ஆசாரியர்கள் விரிவுரை கண்டனர்.

பிரம்மம் என்பதை என்ன என்று ஆராய்வது தான் நமது அடிப்படை வேதாந்த விசாரமே. பிரம்மம் என்பதை அழியாதது என்ற கருத்திலும், எழுத்து வடிவிலும் (ஓம் எனும் பிரணவமாயும்) கூறுகையில் அதை 'அக்ஷர ப்ரஹ்மம்' என்போம். எழுத்தாவது? எங்கும் எதிலும் நிறைந்து நிற்கும் பிரணவத்தை ஒலியாகக் காற்று மண்டலத்திலும் வெட்ட வெளியிலும் இதய ஆகாசத்திலும் நீக்கமறக் காணும்போதும் உணரும்காலும் அது நாதபிரம்மம் எனப் பெயர் பெறுகிறது.

அதை அறிந்து அந்தப் பேரின்ப நிலையிலேயே ஆழ்ந்திருக்கும் பிரம்ம ஞானிகள் பிரம்மானந்தத்தில் திளைத்திருப்பவர்கள். பரபிரம்ம நிலையாகிய இந்தப் பெருநிலையிலுள் சிவானந்தம், ஸச்சிதானந்தம் எல்லாமே அடக்கம். கிருஷ்ணார்ப்பணம் எனக்கூறி உணவருந்தலாம். அந்தக் கண்ணப் பெருமான் பூஜையையும் பிற சிவ, அம்பிகை வழிபாடுகளையும் இனிது நிறைவு செய்து, ப்ரஹ்மார்ப்பணம் எனக்கூறி முடிப்பதன் உட்கருத்து என்னவாக இருக்கமுடியும்? தெய்வ உருவங்களைக் கடந்து நிற்கும் பரம்பொருளை உணர்த்துவது பதம். (பதம் என்றால் இங்கே வார்த்தை, நிலை இரண்டுமே.)

'சிவமயம்' இட்டுக் கடிதம் எழுதுவோம். 'சர்வம் விஷ்ணு மயம் ஜகத்' என்றும் கூறுகிறோம். ஆனால் இதையெல்லாம் மீறி, இதற்குகெல்லாம் வெளிவந்து, 'சர்வம் ப்ரம்ம மயம்' என்று சதாசிவ பிரம்மேந்திரர் போன்ற ஞானியர் கூறும் பெருநிலை கர்ம, பக்தி யோகங்களைக் கடந்துவந்த ஞானத்தின் சிகர தரிசன நிலையாம். ஸ்வாமி என்ற ஆண்டான் (கூடவே அடிமை) நிலை அகன்று, ஞானத்தின் உச்ச நிலையில் எல்லாம் அடிப்பட்டுப்போவதை நாம் நம்மறியாமல் உணர்த்துகிறுப் போல் நம் தெய்வங்களுக்கு நாம் ஸ்வாமி சொல்லை விடுத்துப் பரபிரம்மநிலை கொண்டு முத்தாய்ப்பு செய்வது அன்றாட அர்ச்சனை ஆராதனைகளில் கூடக் காணக் கிடைப்பது!

'ஸீதா லக்ஷ்மண பரத சத்ருக்ன ஹனுமத் ஸமேத ஸ்ரீராம சந்திர ஸ்வாமினே நமஹ' என்பதைவிட, 'ஸ்ரீராமசந்த்ர பரப்ரஹ்மணே நமஹ' என்பதில் ஓர் உயர்நிலை அனுபவம் உண்டல்லவா?

இப்படியேதான் 'ஸ்ரீபாலாம்பிகா ஸமேத ஸ்ரீவைத்யநாத பரப்ரஹ்மணே நமஹ' என்று வைதீசுவரன் கோயிலிலோ, ஸ்ரீசிவகாமசுந்தரி ஸமேத ஸ்ரீநடராஜ பரப்ரஹ்மணே நமஹ' என்று வைத்தீஸ்வரன் கோயிலிலோ, 'ஸ்ரீசிவ

காமசுந்தரி ஸமேத ஸ்ரீநட ராஜ பரப்ரஹ்மனே நமஹ' எனத் தில்லையிலோ சொல் லும்போது சிவ ஸ்வரூபம் கூட சற்றே பின்னுக்கு விலகி சற்று முன் ஸ்ரீராமனுக் குப் பொருந்திய பரபிரம்மநிலை அகக்கண் எதிரே தெரிகிறதல் லவா? உருவ, சகுண வேறு பாடுகள் அகன்ற பெருநிலை பிரம்ம் என்பதன் குறிப்பு, விரிவு இரண்டும் ஆகும்.

நாளை தில்லையில் நடரா ஜப்பெருமானுக்கு ஏகதின லட் சார்ச்சனை என்போம். நட ராஜப் பரம்பிரம்மத்திற்கு அர்ச் சனை எனக்கூறுவோமா?

இதுதான் விஷயம். 'சுவாமி' பக்தித்துறை வார்த்தை. அவர் ஆண்டான் எனில் நாம் அடி யார். நாமும் அவரை ஆட்டி வைக்காலாம். பிரம்மம் என்பது ஞான வாசகச் சொல். பிரம்மத் தைத் தீப்பிடிக்காது. நாம் பிரம் மத்திற்கு அபிஷேகம் செய்ய முடியாது. நம் செயல்பாட் டையெல்லாம் கடந்தது பிரம் மம்! பிரம்மம் குதிரை வாக னத்தில் காட்சி தராது. கன வில்கூடத் தோன்றாது. பிர யாகை த்ரிவேணியில் கூடக் கண்ணுக்குத் தெரியாத சர சுவதிபோலத் தான், பிரம்மதே வனும்! அவரைக் கோயிலில் கட்டிவைக்க முடியாது; தேரில் வைத்து இழுக்கமுடியாது.

நம் நாவில், நம்பிக்கையில், நினைப்பில் மட்டும் இருந்து அருளும் பிரம்மாவை நாமகன் எனலாமா? நாமகள் என்று அவ ரது தேவியைச் சொல்கிறோமே! நிற்க.

ஜகந்நாதன் எனப் பூரியிலும், விசுவநாதன் என்று காசியி லும் தெய்வத்தைக் கொண்டாடு வோம். ஜகம் அல்லது விசுவம் அனைத்தையும் மீறிய, எல்லை யற்ற பெருவெளியைக் குறிப் பிட வேறு பெயர் உண்டு. பிர பஞ்சம் கூட அல்ல.

வேங்கடாத்ரி ஸமம் ஸ்தானம்

ப்ரஹ்மாண்டே நாஸ்தி கிஞ்சன
வேங்கடேசோ ஸமோ தேவோ
ந பூதோ ந பவிஷ்யதி

முதல் அடியில் வரும் பிரம் மாண்டத்தில் ஜகம், விசுவம் எது சொன்னாலும், அத்து ணையும் அடங்கிப்போகும். அடுத்த அடியை இணைத்துப் பார்த்தால் கடந்த காலம், எதிர் காலம் என்ற கால வரையறை களும் பிரம்மத்தில் அடிபட்டுப் போவதை உணரலாம். இடம் காலம் கடந்தது பிரம்மம்.

அந்த பிரம்மத்தை நினைந்து, இன்று இந்திர சித் விடுத்த பிரம்மாஸ்திரத்திற்கு வீர பிரம் மசாரியாகிய அனுமனும் கட் டுண்டு நின்றார். அது பிரம்ம தேவனுக்கு அனுமானின் விநய வணக்கம். தீர ஆழச் சிந் தித்துச் செவ்வனே முயன்று செம்மையாகச் செய்து முடித் தால் என்ன என்பார்கள் அச் செயலை? சொல்லுங்கள்! அதற் குப் பெயர் பிரம்ம பிரயத்தனம்!



"ஸ்ரீமத் த்வாரவரம் மஹத்தி பலிபீடாக்ர்யம் பணீந்த்ரஹ்ரதம்
கோபீநாம் ரமணம் வராஹவ புஷ்பம் ஸ்ரீபட்டநாதம் முநிம்
ஸ்ரீமந்தம் சடவைரிணம் கலிரிபும் ஸ்ரீபக்திஸாரம் முநிம்
பூர்ணம் லக்ஷ்மண யோகிநம் முநிவராந் ஆத்யாந் அதத்வாரபௌ
ஸ்ரீமந் மஜ்ஜன மண்டபம் ஸரஸிஜாம் ஹேதீச போகீஸ்வரௌ
ராமம் நீலமணீம் மஹாநஸவரம் தார்க்ஷ்யம் ந்ருஸிம்ஹம் ச்ரியம்
ஸேநாந்யம் கரிபூதரம் ததுகபரி ஸ்ரீபுண்யகோட்யாம் ஹரீம்
தந்மத்யே வரதம் ரமாஸஹசரம் வந்தே ததீயைர் வ்ருதம்"

மணவாள மாமுனிகள் தன் திவ்யதேச யாத்திரையில் பெரு மாள் கோயிலுக்கு ( காஞ்சிபுரத்திற்கு) எழுந்தருளி தேப்பெருமாள் ஸந்நிதியில் புகுந்ததுமுதல் மங்களாசாஸநம் செய்யப்பட்ட ஸகல ஸந்நிவேசங்களும் இந்த ஸ்லோகத்தில் அவரால் அருளிச் செய் யப்பட்டன.

1) கோயில் திருவாசல் 2) மஹாபலிபீடம் 3) திருவனந்தபுஷ் கரிணி 4) வேணுகோபாலன் 5) ஞானபிரான் 6) பட்டர்பிரான் (பெரியாழ்வார்) 7) நம்மாழ்வார் 8) கலியன் 9) திருமழிசைபிரான் 10) எம்பெருமானார் 11) முதலாழ்வார்கள் 12) த்வார பாலகர்கள் 13) அபிஷேக மண்டபம் என்று வழங்கப்படுகின்ற திருமஞ்சன மண்டபம் 14) பெருந்தேவிதாயார் 15) திருவாழியாழ்வான் 16) திருவனந்தாழ்வான் 17) சக்ரவர்த்தி திருமகன் 18) கரியமாணிக் கப்பெருமாள் 19) திருமடைப்பள்ளி 20) பெரிய திருவடி 21) அழகியசிங்கர் 22) சூடிக்கொடுத்த நாச்சியார் 23) ஸேநாபதியாழ் வான் 24) திருவத்திமாமலை 25) அதன் உச்சியில் புண்ய கோடி விமானத்தில் அடியார்கள் புடைசூழ பேரருளாளன்.

தகவல் N.C. கோபாலன் - சென்னை.

# செய்திச் சுருக்கம்



தி.தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீஅன்னமாசார்யா திட்டத் துறையின் இயக்குநரும் அவதானியுமான டாக்டர் மேடஸானி மோஹன் அவர்களின் "ஸஹஸ்ரவதானம்" எனும் 1000 சான்றோர்கள் ஒருங்கே கூடிடும் அவதான இலக்கிய நிகழ்ச்சி வெகுச்சிறப்பாக அண்மையில் திருப்பதியில் நடைபெற்றது. இதுபோது ஆசுகவி இயற்றியும், மரபுவழி கவிதை பாடியும் திரு. மோகன் அவர்கள் தன் தெலுங்கு இலக்கிய, அவதானக்கலை ஆற்றலையும் வெளிக்காட்டி, 15 நாட்கள் நடைபெற்ற இவ் அவதான நிகழ்ச்சிக்கு வருகைதந்த ஆயிரக்கணக்கான ரசிகர் பெருமக்களை வெகுவாகக் கவர்ந்து, சான்றோர் மற்றும் ஆன்றோரின் பாராட்டுதல்களைப் பெற்றார். இறுதிநாளன்று திரிதண்டி ஸ்ரீமந்நாராயண சின்ன ஜயர்கள் நிகழ்ச்சியில் பங்கேற்று, திரு. மோகன் அவர்களுக்கு 'அவதான பிரம்மா' எனும் பட்டம் அளித்துப் பாராட்டினார்.

* * *

**வெள்ளி விழா**

தி.தி. தேவஸ்தானத்தாரின் தர்ம பிரசார பரிஷத் தன்னுடைய 50 ஆண்டுகள் நிறைவை ஒட்டி 'வெள்ளி விழா' நிகழ்ச்சியினை வெகுச் சிறப்பாக சென்றமாதம் திருமலையில் கொண்டாடியது. சிவ சச்சிதானந்த சுவாமி (குற்றாலம்) விக்ஞானநிதி தீர்த்தர் (முலபாகல்) விருபாக்ஷ சங்கர சுவாமிஜி (ஹம்ப்பி) மற்றும் பல்வேறு மடங்களைச் சார்ந்த சுவாமிஜிகளும் மூன்றுநாள் நடைபெற்ற இவ்வெள்ளிவிழா நிகழ்ச்சியில் பங்கேற்று சமய உரையாற்றினர். ஆந்திர மாநிலத்தின் எல்லா மாவட்டத் தலைநகரங்களில் வேள்விகள் நடத்தவும் சுப்ரபாதம் மற்றும் கீதை சம்பந்தப்பட்ட போட்டிகள் பள்ளி மாணவர்களிடையே நடைபெற வேண்டிய அவசியத்தைப் பற்றியும், திருமலையில் ஒவ்வொரு ஆண்டும் 'பஜனை மேளா' மேற்கொள்ள வேண்டும் என்றும்





இந்து சமய உணர்வு, தரம சிந்தனை மக்களிடையே பெருகிடச் சிறப்பு வகுப்புகள் நடத்திடவும் மேற்படி நிகழ்ச்சியில் முடிவு செய்யப்பட்டன. இவ் வெள்ளிவிழா நிகழ்ச்சியில் 5000 பக்தர்கள் கலந்து கொண்ட 150 பஜனைக் குழுக்கள் பங்கேற்றன. இப்பஜனை மேளாவின் ஊர்வலங்கள் திருப்பதி மற்றும் திருமலை மாடவீதிகளில் மேற்கொள்ளப்பட்டன. தி.தி. தேவஸ்தான உயர் அலுவலர்களும், ஊழியர்களும் இப்பஜனை மேளாவில் பங்கேற்றனர். 'பஜனை மேளா' பக்தர்களுக்கு திருமலையில் இலவச உணவு மற்றும் தங்கு வசதி மேற்கொள்ளப்பட்டன.

* * *

## பாராட்டு

திருப்பதி ஸ்ரீகோவிந்தராஜ சுவாமி கோயில் வளாகத்தில் தான் கண்டெடுத்த ரூ. 25,000 மற்றும் ரூ. 25,000க்கான காசோலை கொண்ட பணப்பையினை அலுவலக அதிகாரியிடம் உடனடியாக ஒப்படைத்த தேவஸ்தான கடைநிலை ஊழியரான திரு. யுவராஜ் அவர்களின் நேர்மையை தேவஸ்தான மேலாண்மை பாராட்டிக் கௌரவித்தது. பின்னர் அப்பையை அதன் உரிமையாளரான முத்தூரைச் சார்ந்த திரு. ஆஞ்சநேயலுக்குத் தகுந்த சாட்சி பரிசீலனைக்குப் பிறகு ஒப்படைக்கப்பட்டது.



* * *

## மற்றைய செய்திகள்

திருப்பதியில் அண்மையில் தி.தி. தேவஸ்தானத்தாரால் கட்டி முடிக்கப்பட்ட ஸ்ரீவேங்கடேஸ்வரா அரங்கிற்குள் ரூ. 1 கோடி செலவில் குளிர்ச்சாதன வசதி அமைத்திட மேலாண்மை முடிவு செய்துள்ளது.

திருப்பதி நகரில் தேவஸ்தானம் தத்து எடுத்துக்கொண்ட நான்கு சாலைகளைப் பழுது பார்த்திட ரூ. 786 இலட்சம் ஒதுக்கப்பட்டுள்ளது. திருப்பதி அடுத்துள்ள புத்தூருக்கு அருகே தி.தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீவேணுகோபாலசுவாமி கோயில் உள்ள காருவேட்டுநகருக்குச் செல்லும் சாலையினை பழுதுபார்த்திட ரூ. 8 இலட்சம் ஒதுக்கப்பட்டுள்ளது.

* * *

## கல்வி கண்ட காரிகை

இப்பாரதம் பெருமைமிகு பெண்கள் பல்வேறு துறைகளில் கண்டு பெருமிதம் கொண்ட பூமியாகும். இவ்வகையில் கல்வித்துறையில் களங்கண்ட பெண்களில் ஒருவராக டாக்டர் கே. ராஜேஸ்வரி மூர்த்தி அவர்கள் திகழ்கின்றார். அத்தகுச் சிறப்பினைக் கொண்ட திருமதி. மூர்த்தி அவர்கள், திருப்பதியில் செயல்படும் திருமலை திருப்பதி தேவஸ்தானத்தாரின் ஸ்ரீபத்மாவதி மகளிர்க் கல்லூரியின் முதல்வராக சுமார் 20 ஆண்டு காலம் பணிபுரிந்ததை தேவஸ்தான மேலாண்மை தனது பெருமையாகக் கருதுகின்றது. ஐக்கிய நாடுகளின் பயிற்சி மற்றும் ஆராய்ச்சி நிறுவனத்தாரின் உறுப்பினராக விளங்கிடும் திருமதி. மூர்த்தி அவர்கள் அண்மையில் WAFUNIF எனும் உலக அமைப்பினரால் அமெரிக்க ஐக்கிய நாடுகளின் 50ஆவது ஆண்டு விழா மற்றும் ஸர்வதேச நாடுகளின் 10-ஆவது இளைஞர் ஆண்டு நினைவு நாளை ஒட்டி 'உயர் விருது' அளிக்கப்பட்டு கௌரவிக்கப்பட்டார். தனது 20 ஆண்டுகள் பதவிக்காலத்தில், திருப்பதி ஸ்ரீபத்மாவதி மகளிர்க் கல்லூரியின் முதல்வராகச் செயல்பட்டு அக்கல்லூரியினை இந்தியாவில் தலைசிறந்த ஒரு கல்வி நிறுவனமாக விளங்கச் செய்தார். மேலும் உலக அளவில் பெண்கள் மற்றும் இளைஞர் சம்பந்தப்பட்ட கல்வித்துறையில் நவீன திட்டங்களை புகுத்திய பெருமை



அவரையே சாரும. இதனால் புகழ்பெற்ற நியூயாரக் நகரததி லுள்ள 'ஆடரே கொஹன கல லூரி'யினரால விருது ஒனறும் திருமதி மூர்ததி அவரகளுககு வழங்கப்படடது. தனனுடைய முதலவர பதவியிலிருநது வில கிச் சென்ற நாள் முதறகொணடு இந்திய மக்கள கலவி மற றும் குடுமபககடடுபபாட்டுக குழுவின் (பமபாய) இயககுநரா கவும், இநதியாவின பல்வேறு பல்கலைக்கழகஙகளின கலவித துறை சாரபான துறைகளில் உயர்பதவிகளில் பணிபுரிந தார். சென்னை பலகலைக் கழகத்தில் தன்னுடைய முதுக லைப் பட்டபபடிப்பை முடிதத திருமதி. மூர்த்தி அவர் கள், தொடர்ந்து கொலம் பியா பல்கலைக்கழகத்தில் டாக் டர் பட்டம் பெற்று ஆராய்ச் சிப் பணிகளை மேற்கொண் டார். பின்னர் அமெரிக்கா, இங்கிலாந்து ஆகிய நாடுக ளில் உள்ள பலகலைக்கழகங் களுக்குப் பல்வேறு நிலைகளில் தொடர்பு பெறறு கல்வித்துறை யில் இணையில்லா அனுபவ மும், தேர்ச்சியும் பெற்று பார தத்திற்குப் பெருமைத் தேடித் தந்துள்ளார். அவர்தம் 'கல் விப்பணி' சேவை மேலும் தொடர, அவ்வேங்கடவன் திரு வருள் பெற்று விளங்கிட வாழ்த் துகின்றோம்.

—ஆசிரியர்.



# திறப்பாயோ கண்ணிரண்டும்

வேங்கடவற்கடியான் - சென்னை.

விண்ணோர் போற்றும் வேங்கட மாமலையில
மண்ணோர மகிழ்விக்க மாதவனே நிற்கின்றாய்!
கண்டோர் வியக்குநின் கார்மேக மேனிதனை
கண்டுள்ள மகிழ்கின்ற காட்சியினை என்சொல்ல?

கண்கண்ட தெய்வமாய் கலியுகத்தில் நீதோனறி
வண்டாடும் வேங்கடத்தில் வரம்தரவே வந்துளளாய்
கண்டோர் கலிபோக்கும் கவின்மிகு நின்விந்தையினை
விண்டோர் கண்டுமிக வியப்பதனை என்சொல்ல?

வேங்கடம் தனைநோக்கி வினயமுடன் வருமடியார
வேங்கடத் தெழில்கண்டு வேதனைகள மறககின்றார்
வேங்கடம் வந்துநின் விமானம் தொழுதிடுவோர்
வேங்கடவா! துயர்நீக்கி வெந்தழலை அணைக்கின்றாய்.

பிறவிப்பிணி யகற்றும் பீடுநிறை திரு(ஏழு)மலையோய்
பலகோடி மாந்தர் பாடியுனை வாழ்த்துகிறார்
உனையன்றி வேறுதெய்வ மிவ்வுலகில் இல்லையென
தனைமறந்து நின்தாளை தஞ்சமென புகுகின்றார.

கோவிந்தா நின்நாமம் குவலயப் பிணியகற்றும்
அச்சுதா நின்கோயில் அடியவர் துயர்தீர்க்கும
கண்ணா நின்கருணை கண்டோர் இடர்தீர்க்கும்
பரந்தாமா நீகாட்டும பரிவினை என்சொல்ல?

என்னைப்போல் அடியவர்கள் ஏழுமலை தனைத்தவிர
அன்னைப்போல் அரவணைக்க அனநதனே யாருள்ளார்?
அகிலமெலாம் தேடியும் அரவணைக்க ஒருவரிலை
இகததிலே உனையன்றி இணையாக எவருள்ளார?

ஏழையேன் உன்னடியை ஏழேழு பிறவிக்கும்
சேவையே செய்துநின் செவ்வடியை தொழுவதற்கு
உழையெல் லாம்போக்க உத்தமனே பாராயோ
தேவையுன் திருவருள் திறப்பாயோ கண்ணிரண்டும்!

தீராதவினை எல்லாம் தீர்த்திடும் தெய்வமென
ஆராதனை செய்யும் அடியவர் இன்னல்களை
பாராயோ பம்மலே பார்த்த னினசாரதியே
தீராயோ எம்மின்னல் திருமாலே கண்திறந்து

தந்ததுன் பமபோதும் தாங்காது இனிதுயரம்
பந்தமெலாம் வேரறுத்து நின்கழல்கள் பற்றிடவே
அடியேன் யாள்விழை யும்ஆவல் நிறைவேற்ற
படியளந்த மாதவனே பார்ப்பதுதான் எக்காலம்?

Published on behalf of T. T. Devasthanams by N. S. Ramamurthy, M.A., Editor and
Printed at T.T.D. Press by P. Mohan Rao, Manager, T.T.D. Press, Tirupati - 517 507

